Regd. No. M. 4382






Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras



திறந்து என்னைப் பார்த்தாள். ஒரு நிமிஷம் என்னைப் புன்சிரிப்புடன் நோக்கிய கண்களில் மறுகணம் சொல்ல முடியாத பீதி தோன்றியது. ஏதோ சொல்ல முயன்றாள். உதடுகள் அசைந்ததே தவிர ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் வழிந்தோடியது. என் கையை எடுத்துத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள். அவ்வளவுதான் கொஞ்சம் கொஞ்சமாகக் கைப்பிடி தளர்வதை உணர்ந்தேன்.

என்னைத் தனியாக இவ்வுலகில் விட்டு விட்டுச் சென்று விட்டாள் என் அத்தை. ஈமச் செலவெல்லாம் போக மிஞ்சிய பணம் மிகச் சொற்பமே. அன்று வரை அத்தையே எல்லாவற்றையும் பார்த்து வந்ததால் எனக்கு ஒரு விதக் கஷ்டமோ தொல்லையோ இல்லாமல் இருந்தது. இப்பொழுதோ வேறு வழியில்லாமல் முனியனைக் கூப்பிட்டேன். நான் அவனைக் கேட்கும் முன்பே "எஜமான்! நீங்க எதுக்காகக் கூப்பிட்டிருக்கீங்கன்னு எனக்குத் தெரியும். நானே உங்களிடம் சொல்லணும் என்று தான் உங்க அத்தையின் விருப்பமும். ஆனால் என்னை மன்னிச்சுடுங்க. என்னாலே முடியாது" என்று கூறி விட்டு விசித்து விசித்து அழ ஆரம்பித்து விட்டான்.

ஏற்கெனவே களைப்பினாலும், மனச் சஞ்சலத்தினாலும் தவித்துக் கொண்டிருந்த எனக்கு, இந்த மர்மமான வார்த்தைகள் கோபம் மூட்டின. ஆகவே அவனைச் சிறிது அதட்டிக் கேட்கவே கையிலிருந்த பணத்தையெல்லாம் மிகுந்த லாபம் தரும் 'ஷேர்கள்' வாங்கியதாகவும், சிறிது காலத்தில் அவை பயனற்றதாக ஆகி விட்டதாகவும் ஏதோ மிஞ்சிய சில சாமான்களை விற்றுப் பணத்தை எனக்குக் கடைசியாக அனுப்பியிருந்ததாகவும் அவனிடமிருந்து அறிந்து கொண்டேன்.

வருங்கால வாழ்க்கை ஒரே இருள் மயமாகத் தோன்றியது. பலவாறு யோசனை செய்து, எங்கேயாவது போய் வேலை தேடிச் சிறிது பணம் சேர்த்துக் கொண்டு வருவது என்று தீர்மானம் செய்து கொண்டேன். போவதற்கு முன்னால் என் இருதயத்தைக் கொள்ளை கொண்ட மோகினியைப் பார்க்காமல் போக முடியவில்லை.

அவர்கள் விலாசத்தை முனியனிடமிருந்து தெரிந்து கொண்டு அந்த வீட்டை அடைந்தேன். ஒரு பெரியவர் வந்து கதவைத் திறந்தார். அவரைப் பார்த்தவுடனேயே அவர் அவளுடைய தந்தையாகத்தான் இருக்க வேண்டும் என்று தெரிந்து விட்டது. என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு என்னுடைய நோக்கத்தையும் வெளியிட்டு நான் திரும்பி வரும்வரை காத்திருக்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டேன்.

அதைக் கேட்டதும் அவர் முகம் சுருங்கியது. "இதோ பார், தம்பி! இந்தக் கடினமான வார்த்தைகளைச் சொல்வதற்கு என் வாய் கூசுகிறது. ஆனாலும் என் பெண்ணின் நன்மையை உத்தேசித்துச் சொல்லியே தீரவேண்டும். இனிமேல் உனக்கும் என் குடும்பத்துக்கும் சொந்தம் ஏற்படுத்திக் கொள்வது என்பது நடவாத காரியம். இந்த ரூபாய்களைக் கொண்டு எங்கேயாவது பிழைத்துக் கொள்" என்று சொல்லி விட்டுச் சில நோட்டுக்களைக் கொண்டு வந்து என்னிடம் நீட்டினார்.

ஏற்கெனவே புண்பட்டிருந்த என் இதயத்தில் அவர் சொன்ன வார்த்தைகள் வெந்த புண்ணில் வேல் இட்டது போல் இருந்தது. என்னுடைய ஆசைக் கோட்டைகள் எல்லாம் தகர்ந்து போயின. வாழ்க்கையே வெறுத்து விட்டது. அங்கிருந்து சட்டென்று திரும்பி ஒரே ஓட்டமாக ஓடினேன்.

★

"அன்றைய தினத்திலிருந்து பைத்தியம்போல் திரிந்து கொண்டிருக்கிறேன். எத்தனையோதரம் தற்கொலை செய்து கொள்ள முயன்றும் இந்தப் பாழும் உயிர் போகவில்லை. இந்த உலகத்தில் இன்னும் உழன்று, அவதியும் அவமானமும் பட்டுச் சாகவேண்டும் என்பது கடவுளுடைய விருப்பம் போலும்!" என்று தன்னுடைய சோகக் கதையைக் கூறி முடித்தான்.

"அதற்குப் பிறகு அந்தப் பெண்ணை எங்கேயாவது பார்த்தாயா?" என்று நான் கேட்டேன்.

"பார்த்தேன்; ஆனால் தெய்வாதீனமாக அவள் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை" என்று சொல்லி விட்டுச் சட்டென்று எழுந்து இருளில் மறைந்து விட்டான்.

வழி முழுவதும் அந்தப் பிச்சைக்காரனின் சோகக் கதையையும் துயர முடிவையும் எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டே வீட்டை அடைந்தேன்.

வாசலில் கவலை தோய்ந்த முகத்துடன் என் மனைவி என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் "எங்கே போயிருந்தீர்கள்? எவ்வளவு நேரமாகி விட்டது? நான் காலையில் செய்த சிறு குற்றத்திற்காக என்னை இப்படித் தண்டிக்கலாமா? நீங்கள் என்னை இன்னும் மன்னிக்கவில்லையா?" என்று ஆவலுடன் வினவினாள்.

"இருக்கட்டும், நீ ஏன் அப்படி உன்னுடைய குணத்திற்கு மாறாக அந்த ஏழைப் பிச்சைக்காரனை விரட்டினாய்?" என்று கேட்டேன்.

"எப்படிச் சொல்வது? அவன் என்னைப் பார்த்த பார்வை எனக்கு அருவருப்பையும் கோபத்தையும் உண்டாக்கின. அதனால்தான் அப்படிச் செய்தேன். பிறகு மனது நிதானத்திற்கு வந்ததும் அவனுடைய பார்வையும் செய்கையும் ஒரு பழைய சம்பவத்தை எனக்கு நினைவூட்டியது" என்றாள்.

"அப்படியா? அதென்ன சம்பவம்?"

"சொல்லி விடுவதே நல்லது. இரண்டு வருஷங்களுக்கு முன்னால் என்னுடன் காலேஜில் படித்த ஒருவருக்கும் எனக்கும் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது. ஆனால் கல்யாணத்திற்குச் சில மாதங்கள் முன்னால் அவருடைய அத்தை திடீரென்று காலமாகி விட்டார். அந்தத் துயரத்தைத் தாங்க முடியாமல் யாருடனும் சொல்லிக் கொள்ளாமல் அவர் எங்கேயோ ஓடிப் போய் விட்டார். அதோடு சொத்து விஷயத்திலும் அவருக்கு ஒரு ஏமாற்றம் ஏற்பட்டதாம். என்னுடைய தந்தையும் என்னைக் கொடுக்க மறுத்து விட்டாராம். ஆனால் சில நாட்கள் கழிந்து அவருடைய சொத்து விஷயம் அவர் எண்ணியபடி மோசமாக இல்லை என்று தெரிந்து அவரைப் பல இடங்களிலும் தேடிப்பார்த்தார் என் தந்தை. எவ்வளவோ முயற்சி செய்தும் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அன்று மறைந்தவர் மறைந்தவர்தான். இன்று வந்த அந்தப் பிச்சைக்காரனின் முகமும் பார்வையும் அவருடைய சாயலாகத் தோன்றவே ஒரு சொல்ல முடியாத வேதனை உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. அதனால் அப்படி நடந்து கொண்டேன். இப்பொழுது சொல்லுங்கள் நான் செய்தது மன்னிக்க முடியாத குற்றமா?" என்று அன்பொழுகக் கேட்டாள்.

இதற்கு மேலும் நான் என்ன சொல்வது? "இல்லை! இல்லை! குற்றமே இல்லை" என்றுதான் சொன்னேன்.

உள்ளத்தைக் கவர்ந்த பெண், "ஆமாம்! வருங்காலத்தைப் பற்றி யார் கண்டார்கள்? பெண்களாய்ப் பிறந்து விட்டால் அடிமை வாழ்வுதான்! இவ்வளவு படித்தும் என்ன பிரயோஜனம்? ஊருக்குப் போனதும் 'கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு சௌக்கியமாக இரு, அம்மா' என்றுதான் அப்பா உபதேசம் பண்ணப்போகிறார்" என்று கூறினாள்.

பரீட்சை முடிந்ததும், அவர்கள் ஊருக்குப் போய்விடுவார்கள். இனி அவளைப் பார்க்க முடியாது என்பதை அப்பொழுதுதான் உணர்ந்தேன். அன்று மாலை என் அறையில் தனியாக உட்கார்ந்து கொண்டு, இதைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கையில் அத்தையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதைப் பிரித்ததும் அதிலிருந்து என்னைக் கொள்ளை கொண்ட கண்மணியின் படம் கீழே விழுந்தது. எனக்கு எப்படியிருந்திருக்கும் என்று நீங்களே யோசித்துப் பாருங்கள்.

சில நாட்களாகத் தன் உடல் நிலை குன்றிப் போயிருப்பதாகவும் என் பணத்தைக் கொண்டு ஏதோ நல்ல 'ஷேர்கள்' வாங்கியிருப்பதாகவும் எழுதியிருந்தாள். அதை எல்லாம் தள்ளிவிட்டு அந்தப் புகைப் படம் என் அத்தையின் கடிதத்திற்குள் எப்படி வந்தது என்பதை அறிய ஆவலுடன் புரட்டினேன். அந்தப் பெண்ணின் தகப்பனார் எங்கள் குடும்பத்து சிநேகிதர் என்றும், எனக்கு இஷ்டமிருந்தால் இந்த விடுமுறையில் கல்யாணத்தை நடத்திவிடலாம் என்றும் எழுதியிருந்தாள்.

என்னுடைய முழுச் சம்மதத்தையும் தெரிவித்து, உடனே கடிதம் எழுதிப் போட்டு விட்டேன். அன்று முதல் ஏதோ ஒரு சொப்பன உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன். பரீட்சையில் தேறுவதற்காக மிகவும் பாடுபட்டுப் படித்தேன். என் ரகசியத்தை எங்கு என் கண்கள் அம்பலமாக்கி விடுமோ என்று பயந்து அவளை வகுப்பில் ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சினேன்.

ஒருவாறு பரீட்சைகள் எல்லாம் முடிவடைந்தன. அத்தையிடமிருந்து சில நாட்களாகக் கடிதம் வராமல் இருந்தது. அது என்னை மிகுந்த கவலையில் ஆழ்த்தியது. எப்படியும் இன்னும் இரண்டு தினங்களில் எல்லாம் தெரிந்து விடும் என்று மனதை ஓர் அளவுக்குத் தேற்றிக் கொண்டேன்.

ரயிலிலிருந்து இறங்கியதும் முனியனைத் தேடினேன். (முனியன், எங்கள் குடும்பத்தில் பல வருஷங்களாக வேலைசெய்து வருபவன்.) ஆனால் அவனைக் காணவில்லை. தந்தி அடித்திருந்தும் அத்தை இவ்வளவு அலட்சியமாக இருந்தது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. ஒரு வண்டியை வைத்துக்கொண்டு வீட்டை அடைந்தேன்.

உள்ளே நுழைந்ததும், ஏதோ ஒரு காரணம் அறியாத பீதி என்னைச் சூழ்ந்து கொண்டது. அதற்குக் காரணம் இல்லாமல் போகவில்லை.

ஒரு கிழிந்த பாயில், என் அத்தை ஸ்மரணை இல்லாமல் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் காலடியில் உட்கார்ந்து கொண்டு, கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தான் முனியன். வீட்டின் நிலைமையையும், என் அத்தையின் தேக நிலைமையையும் கண்ட என் மனம் துணுக்குற்றது. மெதுவாக முனியனைக் கூப்பிட்டு என்னவென்று விசாரித்தேன்.

"எஜமான்! நான் என்ன சொல்வேனுங்க? பதினஞ்சு நாளாக அம்மா இப்படித்தான் இருக்காங்க. பரீட்சை சமயத்தில் உங்களுக்கு எழுதக்கூடாது என்று சொல்லிட்டாங்க. டாக்டர் ஐயா தினம் வந்து பார்த்து விட்டுப்போறாரு" என்றான். அதே சமயத்தில் டாக்டர் உள்ளே நுழைந்தார்.

டாக்டர் நேராகச் சென்று அத்தையை நன்றாகப் பரிசோதித்துப் பார்த்துவிட்டுப் பிறகு, என்னிடம் வந்தார். என்னைப் பார்த்து "நீங்கள்தானா அவருடைய மருமகன்?" என்று கேட்டார்.

"ஆம்" என்று சொல்லி விட்டு, மேலும் என்ன சொல்லப் போகிறாரோ என்று ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"இனியும் உண்மையை மறைத்துப் பயனில்லை. என்னால் முடிந்ததெல்லாம் செய்து பார்த்து விட்டேன். ஒரு பலனும் தென்படவில்லை. வெறும் உடல் வியாதியாக மட்டும் இருந்திருந்தால் நான் முன்பே குணப்படுத்தியிருக்கலாம். ஏதோ மனோ வியாதியும் சேர்ந்து கொண்டு உயிருக்கே உலை வைத்து விட்டது. இனி செய்வதற்கு ஒன்றும் இல்லை" என்று கூறி விட்டுச் சட்டென்று வெளியேறி விட்டார் டாக்டர்.

வெடிகுண்டைப்போல் இந்தச் செய்தி என்னை ஒரு கலக்குக் கலக்கி விட்டது. என் அத்தையிடம் ஓடினேன். என் அருமை அத்தையின் உயிருக்கு உலை வைத்த கவலை என்னவாக இருக்கும் என்று யோசித்துப் பார்த்தேன். அப்பொழுது அத்தை மெதுவாக கண்களைத்

# பிச்சைக்காரனா!

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

சாந்த குணமும் தயாள மனதும் படைத்த என் மனைவிக்கு அன்று என்ன நேர்ந்து விட்டது? எதற்காக அந்த ஏழைப் பிச்சைக்காரனை அவ்வளவு கடுமையாக விரட்டினாள்? அந்த மாதிரி அவள் யாரிடமும் நடந்து கொண்டது கிடையாதே? எனினும் இச்சிறு விஷயத்தினால் எங்களுக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. அதன் காரணமாக என் மனம் மிகவும் சோர்வுற்றிருந்தது. மன ஆறுதலுக்காகப் பார்க்கில் சிறிது நேரம் உலாவி விட்டு வருவோம் என்று வீட்டை விட்டுப் புறப்பட்டேன்.

பார்க்கில் குளிர்ந்த காற்று மெல்லத் தவழ்ந்து வீசியது. வழக்கம் போல் ரேடியோ அலறிக் கொண்டிருந்தது. குழந்தைகள் கூட்டம் கூட்டமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தூரத்திலிருந்த மகிழ மரத்தடியில் உள்ள பெஞ்சு ஒன்றில் உட்காரலாம் என்று எண்ணி அதை நோக்கிச் சென்றேன். அந்த மரத்தை நெருங்கியதும், நான் கண்ட காட்சி என்னை ஒரு கணம் திகைக்க வைத்தது. அந்த மரத்தடியில், அன்று காலை என் வீட்டுக்கு வந்த அதே பிச்சைக்காரன் உட்கார்ந்து கொண்டு ஏதோ பழைய அழுக்கடைந்த புகைப் படம் ஒன்றை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். என் காலடிச் சத்தத்தைக் கேட்டதும் நிமிர்ந்து பார்த்தான். என்னைக் கண்டதும் சட்டென்று படத்தை மறைத்துக் கொண்டு அசட்டுச் சிரிப்பு ஒன்று சிரிக்க முயன்றான். அவனுடைய பரிதாபமான முகமும் கிழிந்த ஆடைகளும் என் உள்ளத்தைக் கலக்கியது. என் சட்டைப் பையிலிருந்து ஓர் அணாவை எடுத்து அவனிடம் நீட்டினேன். ஆனால் அவன் அதை வாங்க மறுத்து விட்டான். அவனுடைய தோற்றம் பிச்சைக்காரனைப் போல் இருந்த போதிலும், ஒரு காலத்தில் நல்ல ஸ்திதியில் இருந்து வாழ்ந்தவன் என்று என் உள்ளத்தில் தோன்றியது. எனவே என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு அவனை நெருங்கிப் பக்கத்தில் இருந்த பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு "இதோ பார்! உன்னைப் பார்த்தால் பிச்சைக்காரனாகத் தோன்றவில்லையே. ஏதோ விதியின் வசத்தினால்தான் இப்படி இருக்கிறாய் என்று எண்ணுகிறேன்" என்று மெதுவாகக் கேட்டேன்.

அவன், "ஆம்; நீங்கள் நினைத்தது சரிதான். ஆனால் அதெல்லாம் எதற்கு? என் துர்ப்பாக்கியக் கதையைக் கேட்டால் யாருக்கும் மனவருத்தம்தான் உண்டாகும்" என்று சொன்னான்.

"உன் கதையைச் சொல்வது உனக்கு மனவருத்தம் அளிக்காது என்றால் என்னிடம் சொல்லு. நான் கேட்கிறேன்" என்று மீண்டும் தூண்டினேன். அவன் சொன்னான் :

★

நான் பிறந்த வேளையே துரதிருஷ்டம் பிடித்த வேளை. இளம் வயதிலேயே என் பெற்றோர்களை இழந்தேன். என் அத்தையே எனக்குத் தாயும் தகப்பனுமாக இருந்து மிகவும் அன்புடன் வளர்த்து வந்தாள். என் தந்தை வேண்டிய அளவு பணமும் சொத்தும் வைத்திருந்தார். அவருக்குக் கொடுத்த வாக்குறுதியின்படி என் அருமை அத்தை என்னைப் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைத்தாள். படிப்பில் வெகு கெட்டிக்காரனாக இல்லாவிட்டாலும், ஒவ்வொரு வகுப்பிலும் தவறாமல் தேறி வந்தேன். பிறகு சென்னைக்கு வந்து கல்லூரியில் சேர்ந்து படித்து வந்தேன்.

எங்கள் வகுப்பில் மூன்று பெண்கள் தான் இருந்தார்கள். ஆரம்பத்திலிருந்தே என் மனதை அவர்களில் ஒருத்தியிடம் பறி கொடுத்து விட்டேன். நாட்கள் வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தன. என் அன்பும் வளர்பிறைச் சந்திரனைப் போல் வளர்ந்து கொண்டு போயிற்று. ஆனால் அவளிடம் அதைப் பற்றிச் சொல்லவோ கேட்கவோ தைரியம் வரவில்லை.

அதுதான் கடைசி வருஷம். பரீட்சையும் நெருங்கிக் கொண்டிருந்தது. ஒரு நாள், கலாசாலை தோட்டத்தில் நுழைந்த போது, அந்த மூன்று பெண்களும் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தார்கள். யதேச்சையாகக் காதில் விழுந்த சில வார்த்தைகளிலிருந்து தங்கள் வருங்கால வாழ்க்கையைப் பற்றித்தான் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள் என்று அறிந்து கொண்டேன். மறு கணம் என்

எங்கிருந்தோ வருகிறாராம். அவர் வரும் சமயம் வீடு முதல் மாடமாளிகை, கூட கோபுரம் வரை தவறாமல் வேப்பங் குழை சொருகி இருக்க வேண்டுமாம். அப்படிச் சொருகாத வீட்டுக்கு அபாயம் நேரிடும் என்று சொல்வாரும் 'அந்த வீடு, அதோடே நெருப்புப் பற்றி எரிந்து போகும்' என்று சொல்வாரும் உண்டு. இந்த வார்த்தைகளை ஜனங்கள் கேட்டுப் பயந்து வீடு தவறாமல் வேப்பந் தழையைச் சொருகி வருகிறார்கள். இப்போதே அவ்வூர் பக்கம் வேப்பமரமெல்லாம், மொட்டை மரமாக நிற்கிறதாம். சித்திரை பிறந்தவுடன் வால் முளைத்த சாமியார், நேரில் வீட்டுக்கு வீடு வருவாராம். அடுத்த வருஷத்திற்கு வேப்ப முத்துப் பொறுக்கி எண்ணெய் எடுப்பதற்கு என்ன செய்வதென்று தெரியாமல் ஏழை ஜனங்கள் கண்ணீர் விடுகிறார்கள் வால் முளைத்த சாமியார் மறைவில் இருக்கையிலேயே இப்படியிருந்தால் நேரில் வந்தவுடன் என்ன வாகுமோ என்று ஜனங்கள் பயந்து கொண்டிருக்கிறார்கள்.

கொழும்பு
28—3—50 பு. அழகப்பன்

○●○

## ஒரே வழி

மாணவர்களுக்குப் படிப்பில் சிரத்தை குறைந்திருப்பதற்குக் காரணம் சேர்ந்தாற்போல் ஐந்தரை மணி நேரம் சுகாதார வசதியே இல்லாத இருட்டறைகளில் அடைத்து வைத்துப் பலவந்தமாக சுகாதாரத்தின் நன்மைகளை எடுத்துப் புகட்டும் கல்வி முறைதான் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். தாங்கள் படித்தவற்றைச் சொந்தமாக யோசித்துப் பார்க்கக் குழந்தைகளுக்கு நிரம்ப அவகாசம் வேண்டும். சொந்தமாக யோசித்து உணருவதில் குழந்தைகளுக்கு கல்வி முறையில் புது ஊக்கத்தையும் கொடுக்கும். இது நான் கூறுவதல்ல; குழந்தைகளுடைய மனதைக் கவனமாகப் பார்த்துப் புத்தகம் எழுதிய பல பெரியோர்கள் கூறுவது. விடாப்பிடியாகத் தங்கள் பழைய முறையிலேயே செல்வதைவிடக் கொஞ்சம் யோசித்து இதையும் எண்ணிப் பார்க்குமாறு நான் அந்த உபாத்தியாயர்களைக் கேட்டுக்கொள்கிறேன். தவிர, இந்த ஒரு வேளைப் பள்ளிக்கூடம் வைத்து நடத்துவதில் மற்றொரு அனுகூலமும் இருக்கிறது. இதனால் கற்க வசதி அற்ற சர்பாதியான முப்பத்தைந்து லட்சம் குழந்தைகளுக்கும் வசதி செய்து கொடுத்தது போலிருக்கும். ஐந்தரை மணி நேரத்தில் கற்பிக்கும் பாடத்தை எப்படி இரண்டரை மணி நேரத்தில் நடத்துவது என்று உபாத்தியாயர்கள் கேட்கலாம். விருப்பமற்று ஐந்தரை மணி நேரம் பாடங்களைக் கற்பதை விட மாணவர்கள் விரும்பி இரண்டரை மணி நேரத்தில் அதிகம் கற்றுக் கொள்வார்கள். வீணாக ஐந்தரை மணி நேரம் ஒரு பயனும் இல்லாமல் கத்துவதை விடப் பயன் பெறும்படி இரண்டரை மணிக்குள் ஆசிரியர்கள் போதிப்பதைப் போதிக்கட்டும். அதனால் நல்ல பலன் கிடைக்கும்.

சென்னை
27—3—50 பி. ராஜாராமன்

○●○

## ★ சங்கீத டியூஷன்

நான் சங்கீதம் கற்றுக் கொண்டிருக்கிறேன்; சில சிறுமிகளுக்குச் சொல்லிக் கொடுத்து மிருக்கிறேன். என் அபிப்பிராயத்தில் சிறுமிகளுக்கு உற்சாகப் படுத்துவதனால் வரும் அளவு சங்கீதம் கோபித்துக் கொள்வதனால் வருவதில்லை என்பது. கலைகள் வளர்வது உற்சாகத்தினால்தான். சொல்லிக் கொடுக்கும் பிள்ளைகளுக்குச் சரியாக வரா விட்டால் கோபம் வருவது இயற்கையே. அதற்காக எப்போதும் எரிந்து விழுவது அழகல்ல. குழந்தைகளின் மனம் புண்பட்டு விட்டால் 'சங்கீதமே எதற்கு?' என்று அவர்களுக்கு வெறுத்துவிடும். ஏற்கெனவே தற்காலத்திய பெண்களுக்குப் படிப்பு, சங்கீதம், நாட்டியம், விளையாட்டு, தையல் என்று எத்தனையோ வேலைகள். நேரமில்லாமல் சலித்து இருக்கும் அவர்களுக்குச் சங்கீதம் மட்டும் சாதகம் செய்யப் பொறுமையும் சாவகாசமும் அதிகம் இருக்காது. 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்பது முற்றிலும் உண்மை. ஆனால் அந்த இறைவனுக்கே உள்ள பொறுமை உபாத்தியாயர்களுக்கும் வேண்டியிருக்கிறது!

நல்ல பாடகரை அமர்த்தி வருஷக் கணக்கில் சங்கீதம் கற்றுக்கொள்ளப் பெரும்பான்மையோரால் முடியாது. அனேகமாக இரண்டு அல்லது மூன்று வருடங்களோடு பெண்களுக்குச் சங்கீத 'டியூஷனை' நிறுத்தி விடுவார்கள். அதற்குமேல் பண வசதியும் காலவசதியும் படைத்தவர்கள் மிகச் சிலரே.

தங்கள் குழந்தைகளுக்குச் சங்கீதம் நன்றாக வரவேணு மென்று ஆர்வத்தோடு கற்றுக் கொடுக்கும் பெரும்பாலான பெற்றோர்கள், நாள் கணக்கு, பணக்கணக்கு அதிகம் பார்க்க மாட்டார்கள். ஆனால் பாடகர்கள் ரொம்பவும் காலதாமத மாக்கினால் எவரும் சலித்துப் போவது இயற்கையே. ஏனெனில் எல்லோரும் பணக்காரர்களாக இருக்க முடியாது. ஆகவே பாட்டு வாத்தியார்களும் பெற்றோர்களின் சிரமத்தைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும். சிறுமிகள் உற்சாகத்தோடு தங்களிடம் சங்கீதம் கற்றுக் கொள்ளும்படி தாங்களே நடந்து கொண்டு சங்கீதக் கலையை விருத்தி செய்ய வேண்டும்.

கல்யாண்
14—3—50 கமலா

---

வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ 'பெண்களுக்கு இடம்' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீமதி வே. ஜயலக்ஷ்மிக்கும் 'சங்கீத டியூஷன்' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீமதி கமலாவுக்கும் ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

அவர்களுக்கென்ன தெரியும் பையன்களின் மன நிலை? படித்த பெற்றோரே இப்படி யாயின் படியாத பெற்றோர்கள் தங்கள் பையன்களை எவ்விதம் நடத்தியிருப்பரோ?

பொதுவாக இவ்வாண்டு பரீட்சை எழுதின அநேக மாணவர்கள் முகத்திலும் சந்தோஷக் களை என்பதே காணப்படவில்லை.

என் விஷயத்தில் எல்லாப் பரீட்சைகளிலும் அதிருப்தியாக முடியவே என் பெற்றோர்கள் என்னிடம் யாரிடமும் வைக்காத தனி அபிமானம் வைக்க ஆரம்பித்தனர்! பரீட்சைத் தினத்திலிருந்து தினசரி எனக்குத் திட்டுதான் கிடைத்து வருகிறது. அப்படித் திரும்பினால் தப்பு; இப்படித் திரும்பினால் தப்பு. நான் என்ன காரியம் செய்தாலும் குற்றம்தான் கண்டுபிடிக்கிறார்கள். ஆனால் ஒரு சில சமயங்களில் மட்டும் திட்டமாட்டார்கள். அது நான் வெளியே சென்றிருக்கும்போதும் இரவிலே தூங்கும்போதும் தான். அதுவரை அவர்களைப் போற்ற வேண்டியதுதான்.

இந்த சமயத்தில் தங்கள் 3-4-50 இதழ் தலையங்கம் பெரிதும் மன ஆறுதலைத் தந்தது

கடிதமும் நீண்டு கொண்டே வருகிறது. இத்துடன் என் கடிதத்தை முடித்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். ஐயோ! தந்தை கூப்பிடுகிறதுபோல் தெரிகிறது. இந்தக் கடிதம் எழுதுவது தெரிந்தால் அவ்வளவுதான்! என் பாடு அனர்த்தம்தான்! ஆகவே இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

மதுரை
3—4—50 ஏ. முத்தையா

○●○

## தமிழ் நாட்டின் அவசியம்

ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம் இன்று தமிழ் நாட்டிற்கு மிகவும் அவசியம். அதிலும் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் தனிப்பெரும் சீடர், ராமகிருஷ்ண அருள் தோய்ந்த சுவாமி விவேகானந்தரின் வீர முழக்கத்தைத் தாம் சட்டக் கல்லூரி மாணவராக இருந்த பொழுதே, கேட்டுக் களித்தவர் ராஜாஜி. அப்படிப்பட்ட நம் தீந்தமிழ் நாட்டின் தனிப் பெருந் தலைவரான ராஜாஜி அவர்களே இந்த உபநிஷதத்தைத் தமிழர்களுக்கு ஆக்கித் தர முழுதும் தகுதி யுடையவர்கள்.

நமது சென்னை சட்டசபையில் 'கோவில் விக்கிரகங்களைப் பொடியாக்கி ரோடுகள் போடலாம்' என்றும், 'சந்நியாசிகள் எல்லாம் ஸ்கௌண்ட்ரல்ஸ்' என்றும் இழிந்து கூறும் பொறுப்பற்ற பேச்சுகள் மலிந்த இக்காலத்து, 'அன்று ராமனாகவும், கிருஷ்ணனாகவும் தோன்றிய நானே இன்று ராமகிருஷ்ணனாகத் தோன்றியுள்ளேன்' என்று அறைகூவிய துறவியின் திருவாக்கை உபநிடதமாக உருவாக்கித் தமிழர்களை நல்வழிப் படுத்த வேண்டியது மிக மிக அவசியம்.

நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்களை இந்த அவசியமான அருட்பணியை ஆற்றித் தமிழர்களை நல்வழிப் படுத்தத் திருப்பிக் கொண்டு வந்து விட்டது திருவருள் சம்மதந்தான் என்பது என் நம்பிக்கை.

தில்லையாடி
27—3—50 சாமி சங்கரானந்தா

○●○

## ★ பெண்களுக்கு இடம்

சென்னை நகர பஸ்களில் பிரயாணம் செய்யும் போது பெண்ணினம் படும்பாட்டைக் கண்டு மனம் வருந்தி, இக்கடிதத்தின் மூலம் அக்குறையைத் தெரியப்படுத்த முன் வந்துள்ளேன்.

ஒரு நாள் கையில் மூன்று வயதுக் குழந்தையைப் பிடித்துக் கொண்டு நமது சர்க்கார் பஸ் ஒன்றில் ஏறினேன். வழக்கம் போல் ஒரே நெருக்கடி; உட்கார இடமில்லை. என்னைப்போல் கடின அவஸ்தையில் இன்னுமொரு பெண்மணியையும் கண்டேன். பாவம்! அவள் பூரண கர்ப்பிணி. உட்கார்ந்திருந்த ஆண் சிங்கங்களில் ஒருவருக்காவது எழுந்திருந்து பெண்களுக்கோ, குழந்தைகளுக்கோ இடம் கொடுக்கும் உத்தேசமேயில்லை. பஸ்களிலாவது ஸ்திரீகளுக்குச் சம உரிமைகள் இருக்கட்டுமென்று எண்ணினார்கள் போலும்!

"பஸ்களில் பெண்களுக்குப் புருஷர்கள் உட்கார இடம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்" என்று சர்க்கார் சில மாதங்களுக்கு முன் கோரிக்கை விடுத்தார்கள். அதற்குப் பிறகு நான் சென்னை ஆணினத்துக்கு அக்கோரிக்கைக்கு மாறாக நடக்க வேண்டுமென்று விபரீத புத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

கல்கத்தாவில் பஸ்களில் பெண்களுக்கென்று தனி ஸீட்டுகள் ஒதுக்கியிருப்பது போல் நம் சர்க்காரும் செய்வார்களானால் மிகவும் வசதியாக இருக்கும்.

தியாகராயநகர்
1—4—50 வே. ஜயலக்ஷ்மி

○●○

## வால் முளைத்த சாமியார்

மேலே உள்ள தலைப்பைப் பார்த்துப் பயந்து விடாதீர்கள். இது ஒரு அதிசய சம்பவம்.

இராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த சிவகங்கைக்குப் பக்கமான நாட்டரசன் கோட்டை, பாகனேரி, கல்லல் முதலான ஊர்களில் ஒரு செய்தி பரவிவருகிறது அதாவது, வால் முளைத்த சாமியார் ஒருவர்

'வென்(று) இவண் வருவென்என்(று)
உரைக்கி லேன், விதி

நின்றது பிடர்பிடித்(து)
உந்த நின்றது;

பொன்றுவென் பொன்றினல்ப்,
பொலன்கொள் தோளியை

வென்றெனை, நாயக,
விடுதி நன்றரோ.

[வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்: நடக்க இருக்கும் யுத்தத்தில்வென்று இங்கே திரும்பி வரக்கூடும் என்ற எண்ணம் சிறிதும் எனக்கு இல்லை; விதி நின்றது பிடர்பிடித்து உந்த நின்றது: இதுவரை காத்துக் கொண்டு நின்ற விதியானது இப்போது என் பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறது: பொன்றுவென்: இறந்துதான் போவேன்; பொன்றினல்: இறந்துபோன பிறகு; பொலன்கொள் தோளியை: பொன்மயமான அழகு வாய்ந்த தோள்கொண்ட சீதையை; வென்றெனை: வென்று கைப்பற்றிக் கொண்டதான தன்மையில்; நாயக விடுதி நன்று அரோ: ராவணேசுரனே விட்டுவிட வேண்டும், அப்பா! மரியாதையாகத் தானே சீதையை விட்டுவிட வேண்டும்.]

"இறக்கத்தான் போகிறேன் யுத்தத்தில்; ஆனாலும் ஒரு வேண்டுகோள். சீதையை எப்படியாவது தக்க மரியாதையுடன் ராமனிடம் ஒப்புவித்து விடவேண்டும். அப்படி ஒப்புவித்துவிடுவதே சீதையை வெற்றிகரமாய்க் கைக்கொண்டது என்பதாக உலகம் புகழும் உன்னை"—என்று மன்றாடுகிறான் கும்பகர்ணன். கும்பகர்ணனுடைய வீரத்தில் நிற்கிற "ஊராண்மையை" அழகாய் விளக்குகிறார் கம்பர்.

# வட்ட மேஜை



## வேறு வழி கிடையாதா?

வரதட்சிணையை ஒழிக்க அநேகம் பேர் அநேக யுக்திகளைச் சொல்லுகிறார்கள். ஒருவரும் அந்த யுக்திகளைக் கையாளுவதாகத் தெரியவில்லை. இக்காலத்தில் ஸ்மார்த்த, வடகலை அய்யங்கார் வகுப்பில் இந்த வழக்கம் இருப்பது உண்மைதான்.

ஆனால் தென்கலை அய்யங்கார் வகுப்பில் கல்யாணம் ஆகாதவர்கள் என்னைப் போல் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். ஸ்திரீகளைப் படிக்க வைப்பதில் கல்யாணம் பண்ணும் பிரச்னையின்போது மத்திய வகுப்பினருக்குச் சிறிது கஷ்டம் ஏற்படுகிறது. படிக்க வைத்தால் வேலைக்கு அனுப்பிவிடலாமென்று நினைக்கிறார்கள். ஆனால் அந்த விஷயம் எல்லோருக்கும் பிடித்தமானதென்று சொல்வதற்கில்லை. உபாத்தியாயினி உத்தியோகம் தவிர குமாஸ்தா உத்தியோகம் செய்யும் பட்சத்தில் ஆண் உலகம் அவர்களைப் பார்த்துக் கேலி செய்கிறது. இதனால் அந்தப் பெண்கள் மனம் நொந்து போகிறார்கள். கல்யாணம் செய்து கொள்ளலாமென்ற பக்ஷத்தில் புருஷ திக்கு இல்லாதவர்கள் எப்படி வரன் தேடுவார்கள்? 'சிரிப்பார் முன்னால் இடறி விழுந்தாப் போல்' என்று ஒரு பழமொழி உண்டு. அது போல் உற்றார் உறவினர் இதுதான் சமயமென்று நம் தலையில் கல்லைப்போடப் பார்க்கிறார்கள். நம்மை ஒரு விதத்திலும் போக விடாமல் தடுக்கிறார்கள். இதற்கு வேறு வழியே கிடையாதா?

சமூகம் இது போன்ற எல்லாவிஷயங்களையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது. இப்படிப்பட்ட அநேகங்களை முன்னேற ஒரு வழியும் சொல்வதில்லை.

கொத்தவால்சாவடி
28—3—50 பி. ப. வேதவல்லி

○●○

## மாணவர்களின் நிலைமை

நான் கணக்குப் பரீட்சை எழுதி விட்டு வீட்டுக்கு வந்தேன். "எல்லாக் கணக்குகளையும் நன்றாகச் செய்தாயா?" என்ற கேள்வி பிறந்தது வீட்டுக்குள் நுழைந்தவுடன். சில கணக்குகளை போட்டுச் சோர்வடைந்த எனக்கு இக்கேள்வி மேலும் சஞ்சலத்தையே உண்டு பண்ணியது. நான் செய்ததைக்கூறி அவர்களிடம் கேள்வித்தாள்களின் நிலைமையைக் கூறினேன். அவர்கள் ஆதரிக்கவில்லை; ஆத்திரப்பட்டனர். "சொல்லிக் கொடுக்காமலா கேள்விகள் கேட்பார்கள்?" என்று சீறினர். வசவுகள் பல கிடைத்தன. நான் ஒன்றும் கூறவில்லை. என்ன கூறமுடியும்?

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 290. விடுவிப்பதே வெற்றி.

ஒழுங்கான காரியம் இன்னதுதான் என்று கும்பகர்ணன் சொன்னான்:

"சீதையை விட்டுவிட வேண்டியது, சமாதானத்தைக் கோர வேண்டியது. இப்படிச் செய்ய மனம் இல்லையானால் நம்முடைய சக்திகளெல்லாவற்றையும் ஒரு முனைப்படுத்திப் போர் செய்து, எதிரியே இல்லையென்று ஆக்கிவிட வேண்டும்" என்று சொன்னான்.

ராவணனுக்குக் கோபந்தான் வந்தது. கும்பகர்ணனை 'எழுந்து எங்கே யாவது போய்த் தொலை' என்று சொல்லிவிட்டு, தன்னுடைய தேரைக் கொண்டு வரச் சொன்னான். வாளை எடுக்கச் சொன்னான்.

தானே யுத்தத்துக்குப் போவதாகப் பறை சாற்றவும் சொன்னான். சொல்லி விட்டு வீரா வேசத்தோடு எழுந்து நடக்கிறான்.

**'தருகஎன் தேர்படை;**
**சாற்றென் கூற்றையும்;**

**வருகமுன் வானமும்**
**மண்ணும் மற்றவும்,**

**இருகைவன் சிறுவரோ(டு)**
**ஒன்றி என்றெடும்**

**பொருகவெம் போர்!' எனப்**
**போதல் மேயினான்.**

**[தருக என் தேர்படை: கொண்டு வாருங்கள் என் தேரையும் வாள் முதலான ஆயுதங்களையும்; சாற்றென் கூற்றையும்: எல்லாருக்கும் சொல்லுங்கள் நான் சொல்லுவதை—தானே போர் செய்யப் போகிறேன் என்பதாக; வருக முன் வானமும் மண்ணும் மற்றவும்: வரட்டும் என் முன்னே—வானவர், உலகத்தார், பிறர் எல்லாருமே; இருகை வன் சிறுவரோடு ஒன்றி: ஏதோ இரண்டு கைகள் உள்ள அற்பர்களோடு (ராம லக்ஷ்மணர்) சேர்ந்து கொண்டு; என்றெடும் பொருக வெம்போர்: என்றேனும் பெரும்போர் விளைக்கட்டும் — அத்தனை பேருமே; எனப் போதல் மேயினான்: என்று கர்ஜித்து விட்டு நடக்க ஆரம்பித்தான் ராவணன்.**

**குறிப்பு:—ஆங்கார பாவம் கனகன என்று பேசுகிறது செய்யுளில்.]**

* * *

ராவணன் எழுந்து நடப்பதைப் பார்த்துக் கொண்டான் கும்பகர்ணன்.

**அன்னது கண்டனன்**
**தம்பி, ஆயவன்**

**பொன்னடி வணங்கி'நீ**
**பொறுத்தி யால்'என**

**வல்நெடும் சூலத்தை**
**வலத்து வாங்கினான்,—**

**இன்னும்ஒன்(று) உளதுரை**
**என்னக் கூறினான்.**

**[அன்னது கண்டனன் தம்பி: ராவணன் எழுந்து நடப்பதைக் கண்ட கும்பகர்ணன்; ஆயவன் பொன்னடி வணங்கி: ராவணனது பாதத்தை வணங்கி; நீ பொறுத்தியால் என: நீ கொஞ்சம் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லி; வல்நெடும் சூலத்தை வலத்து வாங்கினான்: மிகப் பெரிய திரிசூலத்தை வலது கையில் எடுத்துக் கொண்டான்;—எடுத்துக் கொண்டு இன்னும் ஒரு வார்த்தை உன்னிடம் சொல்ல வேண்டியது இருக்கிறது என்று சொன்னான் கும்பகர்ணன்.]**

* * *

என்ன சொல்லப் போகிறான். பார்க்கலாம்.

கும்பகர்ணன் எத்தனையோ போர் புரிந்து அனுபவம் பெற்ற வீரன். அவனுக்கு எதிரிகளின் பலாபலம் இன்னதென்று தெரியும். ராவணனுக்குத் தோல்விதான், வம்சத்துக்கே அழிவு வரப்போகிறது என்று நிச்சயித்து விட்டான். சொல்லுகிறான்:


அழுக்கடைந்த கம்பளம் ஹானியற்றது போலிருக்கிறது. ஆனால்
இந்த கைகள்
மறைந்திருக்கும் அபாயத்தை
தாங்குகின்றன!
அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப்புலப்படாத கிருமிகளில் அபாயமிருக்கிறது
லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்
லைப்பாய் சோப்
அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைக்காப்பாற்றுகிறது!
L. 139-50 TM

தோலியில் மட்டும் நடக்கும் அஹிம்சைப் போரினால் பயன் விளையாது. பூரண அஹிம்சையை நிலை நிறுத்த முடியும் என்ற அடிப்படையிலேயே நான் சட்டமறுப்பு இயக்கத்தை நடத்தத் திட்டம் போட்டேன். பாதி பலாத்காரமும் பாதி அஹிம்சையுமாக நடக்கும் இயக்கத்தில் நான் சம்பந்தப்பட முடியாது. அத்தகைய இயக்கத்தினால் சுயராஜ்யம் வந்தாலும் அது உண்மையான சுயராஜ்யமாயிராது. ஆகையால் பர்தோலியில் 11உ காரியக் கமிட்டி கூட்டத்தைக் கூட்டுகிறேன். இந்தக் கூட்டத்தில் பொது ஜனச் சட்ட மறுப்பு இயக்கத்தை நீடித்துத் தள்ளிப் போடுவதைப் பற்றி யோசிக்கப்படும். அப்படி நீண்டகாலம் தள்ளிப் போட்டால்தான் தேசத்தை நிர்மாண முறையில் தயார் செய்து அஹிம்சை வேரூன்றச் செய்ய முடியுமென்று நான் கருதுகிறேன். தாங்கள் கூட்டத்துக்கு வர முடியாவிட்டால் தங்கள் அபிப்பிராயத்தை எழுதி அனுப்பக் கோருகிறேன். இது விஷயமாகத் தங்கள் நண்பர்கள் பலரையும் கலந்து யோசித்து அவர்களுடைய அபிப்பிராயத்தையும் தெரிவிக்க வேண்டுகிறேன்.

தங்கள்

உண்மையுள்ள,

(ஒப்பம்) எம். கே. காந்தி.

காந்திஜியின் இந்த முடிவு தெரிய வந்தும் ஆசிரமவாசிகளே திடுக்கிட்டார்கள் என்றால், மற்றவர்களைப் பற்றிச்சொல்ல வேண்டியதில்லை. மகாத்மாவினிடம் பக்தி கொண்டவர்கள் அனைவரும் மேற்படி செய்தியினால் மிக்க மனச் சோர்வு அடைந்தார்கள். மகாத்மாவை ஏற்கெனவே விரோதித்தவர்களோ அளவிலாத கோபத்தை அவர்மீது சொரிந்தார்கள்.

ஆயினும் மகாத்மா ஒரே பிடிவாதமாக இருந்தார். 11உ கூடிய காரியக் கமிட்டியில் தீவிர விவாதம் நடந்தது. ஸ்ரீ கேல்கர் போன்ற சிலர் மகாத்மாவின் முடிவைப் பலமாக எதிர்த்தார்கள். மற்றவர்கள் மகாத்மாவிடம் உள்ள பக்தியினால் அடங்கியிருந்தார்கள். விவாதத்தின் முடிவில், எல்லாவிதச் சட்ட மறுப்புகளையும் நிறுத்தி வைத்துத் தேச மக்கள் நிர்மாண வேலையில் தீவிரமாக ஈடுபட வேண்டும் என்ற தீர்மானம் காரியக் கமிட்டியில் நிறைவேறியது.

மறுநாள் 12உ அதாவது என்றைய தினம் பர்தோலி யுத்தம் தொடங்குவதாக இருந்ததோ அதே தினத்தில், மகாத்மா காந்தி சௌரி-சௌரா பயங்கர நிகழ்ச்சியை முன்னிட்டு ஐந்து நாள் உண்ணாவிரதம் தொடங்கினார்.

காரியக்கமிட்டி தீர்மானத்துடனும் மகாத்மாவின் உபவாசத்துடனும் காரியம் முடிந்துபோய் விடவில்லை.

தேசமெங்கும் அதிருப்தி கடல்போலப் பொங்கியது. மகாத்மாவின் ஆத்ம சகாக்கள் என்று கருதப்பட்டவர்கள் பலர் அவரை எதிர்த்துத் தாக்கினார்கள்.

தென்னாப்பிரிக்காவில் ஒரு சமயம் மகாத்மா சத்தியாக்கிரஹத்தை நிறுத்திய போது அவர் இந்தியர்களைக் காட்டிக் கொடுத்து விட்டதாக எண்ணி ஒரு பட்டாணியன் அவரைத் தடியால் அடித்து அவருடைய மண்டையை உடைத்துவிட்டான் அல்லவா?

ஏறக்குறைய அத்தகைய சூழ்நிலை தேசத்தில் ஏற்பட்டுவிட்டது. "காரியத்தைக் கெடுத்துவிட்டார் மகாத்மா!" என்று கூக்குரல் எங்கும் எழுந்தது. யாரும் அவரைத் தடியால் அடிக்கவில்லை; அவ்வளவுதான். தடியால் அடிப்பதைக் காட்டிலும் கொடுமையான குரோத மொழிகளை மகாத்மாவின் தலைமீது பொழிந்தார்கள். அவ்வளவையும் சத்தியத்துக்காகவும் அஹிம்சைக்காகவும் மகாத்மா சகித்துக் கொண்டார். கடல் கடைந்தபோது எழுந்த விஷத்தை விழுங்கிப் புவனத்தைக் காப்பாற்றிய நீலகண்டனைப் போல் அச்சமயம் காந்திஜி விளங்கினார்.

பம்பாயிலும் சென்னையிலும் நடந்த குற்றங்களுக்கு ஏதேனும் ஓரளவு சமாதானம் சொல்ல இடமிருந்தது. ஆனால் இந்தக் கோர பயங்கரச் செயலுக்கு என்ன சமாதானத்தைச் சொல்ல முடியும்? மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கையை மக்கள் கொஞ்சங் கூட அறிந்து கொள்ளவில்லை என்று தானே அதிலிருந்து ஏற்படும்! சௌரி–சௌராவில் நடந்தது போல் தேசமெல்லாம் நடக்காது என்பது என்ன நிச்சயம்? அதன் பயனாகத் தேசம் எவ்வளவு விபரீதமான தீங்குகளை அடைய நேரும்?

இத்தகைய வேதனை நிறைந்த எண்ணங்களைச் சௌரி–சௌரா நிகழ்ச்சி பற்றிய செய்திகள் மகாத்மாவின் மனதில் உண்டாக்கின. மிக முக்கியமான விஷயங்களைக் காந்திஜீ தம் அந்தராத்மாவின் புத்திமதிப்படி ஒரு நொடியில் தீர்மானித்து விடுவதுதான் வழக்கம். ஆகவே இப்போதும் பர்தோலி சட்டமறுப்பைக் கைவிடுவது என்று ஒரே நிமிஷத்தில் மகாத்மா தீர்மானித்து விட்டார். இத்தகைய தீர்மானத்துக்கு வரக்கூடிய தீர புருஷர் இந்த உலகத்திலேயே மகாத்மாவைத் தவிர யாரும் இருக்க முடியாது என்று சொன்னால், அது மிகையாகாது. ஏனெனில், முதல் நாள் 7-ந் தேதிதான் வைஸராய்க்குக் கடுமையான முறையில் மகாத்மா பதில் அளித்திருந்தார். பர்தோலி ஜனங்கள் துடி துடித்துக் கொண்டிருந்தார்கள். தேசமக்கள் எல்லாரும் பர்தோலியை நோக்கிக் கொண்டிருந்தார்கள். சிறையிலேயிருந்த பதினாயிரக் கணக்கான காங்கிரஸ் வாதிகளும் பர்தோலி இயக்கத்தை எதிர் நோக்கியிருந்தார்கள்.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் இயக்கத்தை ஆரம்பியாமல் நிறுத்துவது என்று வேறு யாரால் முடிவு செய்ய முடியும்?

மகாத்மா முடிவுசெய்து விட்டாலும் அதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி மூலம் ஊர்ஜிதம் செய்ய வேண்டும் அல்லவா? அதற்காகப் பிப்ரவரி மாதம் 11-ந் தேதி பர்தோலியில் காரியக் கமிட்டி கூட்டத்தைக் கூட்டத் தீர்மானித்துக் காரியக் கமிட்டி அங்கத்தினருக்குப் பின்வரும் கடிதத்தை மகாத்மா எழுதினார்:—

அந்தரங்கம் (பிரசுரத்துக்கு அல்ல)

பர்தோலி
8—2—1922

பிரிய நண்பரே!

பொதுஜனச் சட்டமறுப்பை ஆரம்பிக்கும் தறுவாயில் நான் பெரும் அதிர்ச்சி அடைந்தது இது மூன்றாவது தடவை. 1919-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் முதல் முறையும் சென்ற நவம்பர் மாதத்தில் பம்பாயில் இரண்டாவது முறையும் அதிர்ச்சி பெற்றேன். இப்போது மறுபடியும் கோரக்பூர் ஜில்லாவில் நடந்த சம்பவங்கள் என்னைப் பெரிதும் கலங்க வைத்து விட்டன. தேசத்தின் மற்றப் பகுதிகளில் பலாத்காரக் குற்றங்கள் நிகழும்போது பர்



வெளியிலிருந்து தருவிப்ப தில்லையென்று சொன்னார்கள். கட்டை வண்டிகளில் இராட்டினங்களை ஏற்றிக் கொண்டு காங்கிரஸ் தொண்டர்கள் கிராமம் கிராமமாகச் சென்று வேண்டியவர்களுக் கெல்லாம் கொடுத்து வந்தார்கள். அப்போது பர்தோலி தாலூகா சாலைகளில் இது ஒரு அற்புதமான காட்சியாயிருந்தது.

ஜனவரி 29உ நடைபெற்ற பர்தோலி தாலூகா மகாநாட்டில் நிறைவேறிய முக்கியமான தீர்மானம்,

> "தேசத்தின் விடுதலைக்காக அந்தத் தாலூகா வாசிகள் ஸ்தாவர—ஜங்கம சொத்துக்களை இழக்கவும், சிறைப்படவும், அவசியமானால் உயிரையும் தியாகம் செய்யவும் சித்தமாயிருக்கிறார்கள்"

என்று பறையறைந்து சொல்லிற்று. அத்துடன் மகாத்மாவின் தலைமையில் அஹிம்சையைக் கடைப் பிடித்துப் பொது ஜனச் சட்ட மறுப்பைப் பிப்ரவரி 12உ தொடங்குவ தென்றும், தாலூகா வாசிகள் சர்க்காருக்கு இனி நில வரியோ வேறு வரிகளோ கொடுக்கக் கூடா தென்றும் மேற்படி மகாநாடு தீர்மானித்தது.

பர்தோலி மக்களின் இத்தகைய கட்டுப்பாடும் உத்வேகமும் மகாத்மாவுக்கு எல்லையற்ற உற்சாகத்தை அளித்திருந்தது. பம்பாய் மாகாணத்தில் பல பகுதிகளிலிருந்தும் பற்பல பிரமுகர்கள் பர்தோலிக்கு வந்தார்கள். ஆனால் மகாத்மாவின் ஆசிரமத்தில் அனுசரிக்கப்பட்ட கட்டுப்பாடு அவர்களில் சிலருக்குச் சங்கடத்தை அளித்தது. உதாரணமாக, ஸ்ரீ வி. ஜே. படேல் அவர்களுக்கு அதிகாலையில் எழுந்து பழக்கமில்லை. அதோடு அவருக்குக் கொஞ்சம் வாத நோயும் உண்டு. ஆசிரமத்திலோ காலை நாலு மணிக்கே அனைவரும் எழுந்து பிரார்த்தனைக்கு வந்தாக வேண்டும். ஸ்ரீ வி. ஜே. படேலைக் காலை நாலு மணிக்கு எழுப்பிய போது, அவர், "நாராயணா! நாராயணா! இப்படியும் தொந்தரவு படுத்துவது உண்டா?" என்று புகார் செய்தார். ஆனால் புகாரை யார் கேட்கிறார்கள்? அவரும் கட்டாயமாகப் பிரார்த்தனைக்குப் போகவேண்டியதாயிருந்தது. ஆத்ம சாதனத்துக்கு இத்தகைய விரதங்களும் கட்டுப்பாடுகளும் அவசியம் என்பது மகாத்மா காந்தியின் கொள்கை. "ஆத்ம சாதனம் இங்கே யாருக்கு வேண்டும்? இந்தியாவுக்குச் சுதந்திரம் அல்லவா வேண்டும்?" என்பது ஸ்ரீ படேலின் கேள்வி. ஆனால் இந்தக் கேள்வியை அவர் மகாத்மாவிடம் கேட்கவில்லை. இந்தியாவின் சுதந்திரம் மகாத்மாவின் தலைமையினாலேயே கிடைக்கக் கூடியதாயிருந்தது. எனவே, அதற்காக "ஆத்ம சாதனத்தைத் தேடக்கூட நான் தயார்!" என்றார் ஸ்ரீ வி. ஜே. படேல்.

இவ்விதம் ஒரு வார காலம் சென்றது. ஒவ்வொரு நாளும் மகாத்மா பர்தோலி ஜனங்களுக்கு மேலே செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றி அறிக்கைகள் விடுத்து வந்தார். ஜனங்கள் மகாத்மா காந்தியின் கட்டளைகளை அணுவளவும் வழுவாமல் நிறைவேற்றுவதற்கு ஆயத்தமாகி வந்தார்கள்.

காந்திஜி வைஸராய் ரெடிங்குக்கு எழுதிய பகிரங்கக் கடிதத்துக்கு இந்திய சர்க்கார் 6உ பதில் அறிக்கைவிட்டார்கள். அதில் மகாத்மாவின் மீது இல்லாத குற்றங்களை யெல்லாம் சுமத்தியிருந்தார்கள். இந்தக் குதர்க்க அறிக்கைக்குப் பிப்ரவரி 7உ மகாத்மா ஒரு பதில் விடுத்தார். அந்தப் பதில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையே ஒரு ஆட்டு ஆட்டுவிக்கும் படியான சக்தி வாய்ந்ததாயிருந்தது. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தாரின் குதர்க்கங்களுக்கு மகாத்மா அவ்வளவு உத்வேகமான தீவிர மொழிகளில் பதில் சொல்லி யிருந்தார்.

இப்படிப்பட்ட நிலைமையில், பிப்ரவரி 8உ எதிர்பாராத பேரிடி யொன்று விழுந்தது. சௌரி—சௌராவில் நடந்த கோர சம்பவத்தைப் பற்றிய செய்தி வந்தது. ஐக்ய மாகாணத்தில் கோரக்பூர் ஜில்லாவில் சௌரி—சௌரா ஒரு சிறு பட்டணம். மேற்படி கோரக்பூர் ஜில்லாவில் முப்பத்துநாலாயிரம் தேசியத்தொண்டர்கள் சேர்ந்திருக்கிறார்கள் என்று சில நாளைக்கு முன்பு ஒரு உற்சாகமான செய்தி வந்திருந்தது. அவர்களில் எத்தனை பேர் கதர் உடுத்தியவர்கள் என்று காந்திஜி விசாரித்ததற்கு 'நாலில் ஒரு பங்கு பேர் தான் கதர் உடுத்தியவர்கள்' என்று தகவல் கிடைத்தது. இந்த நிலை மகாத்மாவுக்குத் திருப்தி யளிக்கவில்லை. நாலில் ஒரு தொண்டர்தான் கதர் உடுத்துகிறார் என்றால் அஹிம்சை நெறியை உணர்ந்தவர்கள் எத்தனை பேர் இருக்க முடியும் என்ற கவலையை மகாத்மா தம் அருகிலிருந்தவர்களிடம் வெளியிட்டார்.

இப்படி மகாத்மாவுக்கு ஏற்கெனவே கவலை யளித்திருந்த அதே ஜில்லாவிலிருந்துதான் இப்போது அந்தப் பயங்கரமான செய்தி வந்தது:—

"சௌரி-சௌராவில் வெறிகொண்ட ஜனக்கூட்டம் ஒரு போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கி நெருப்பு வைத்து இருபத்தோரு போலீஸ் ஜவான்களை உயிரோடு கொளுத்திக் கொன்று விட்டது."

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா. கி.

## 37. பேரிடி விழுந்தது!

மகாத்மா காந்தி தம்முடைய தர்ம யுத்தத்தின் இறுதிப் போருக்குப் பர்தோலியைக் குருக்ஷேத்திரமாகத் தேர்ந்தெடுத்திருந்தார். ஆகவே 1922-ம் வருஷம் ஜனவரி மீ 28வ பர்தோலிக்குப் பிரயாணமானார். அன்று காலைப் பிரார்த்தனையின் போது சபர்மதி ஆசிரமவாசிகளிடம் மகாத்மா விடை பெற்றுக் கொண்டார். ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி உள்பட ஆசிரமப் பெண்மணிகள் அனைவரும் கண்ணீரும் கண்ணீருமாக மகாத்மாவுக்கு விடை கொடுத்தார்கள். பர்தோலிப் போருக்குப் போகிறவர் எப்போது திரும்பி வருவாரோ என்பதைப் பற்றி எதுவும் சொல்ல முடியாமலிருந்தது. திரும்பி வருவாரோ அல்லது வரவே மாட்டாரோ, யாருக்குத் தெரியும்? இந்த எண்ணத்தினால் அனைவருடைய உள்ளங்களும் கசிந்துருகிய போதிலும் அவர்கள் தங்கள் துயரத்தை அதிகமாக வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. மகாத்மா இல்லாத சமயத்தில் ஆசிரமத்தின் வேலைகளையெல்லாம் இயன்ற வரையில் சரிவர நடத்தி வருவதாக வாக்களித்தார்கள். மகாத்மாஜி அவர்களுக்கெல்லாம் பகவத் கீதையை வழி காட்டியாகக் கொண்டு அவர்களுடைய கடமைகளை நிறைவேற்றி வரும்படியாக உபதேசித்தார்.

பர்தோலியில் மகாத்மாவுக்கு மகத்தான வரவேற்பு காத்திருந்தது. பர்தோலி வாசிகள் இந்தியாவுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுக்கும் பொறுப்பும் பாக்கியமும் தங்களுக்குக் கிடைத்துள்ளன என்பதை உணர்ந்திருந்தார்கள். பழைய கிரேக்க ராஜ்யத்தின் சுதந்திரத்துக்குப் பாரஸீகர்களால் ஆபத்து வந்த போது தர்மாபைலே என்னும் கணவாயில் சில கிரேக்க வீரர்கள் நின்று போராடி தங்கள் உயிரை அர்ப்பணம் செய்து கிரேக்க நாட்டின் சுதந்திரத்தை நிலைநாட்டியது சரித்திரப் பிரசித்தமான சம்பவம். "பர்தோலி பாரத நாட்டின் தர்மாபைலே" என்னும் பல்லவியைக் கொண்ட சுதந்திர கீதம் ஒன்று அச்சமயம் பர்தோலியின் மூலை முடுக்குகளிலெல்லாம் பாடப்பட்டு வந்தது.

பர்தோலியில் மகாத்மாவுக்குத் துணை நின்று பொது ஜனச் சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்துவதற்காகப் பம்பாயிலிருந்து ஸ்ரீ வி. ஜே. படேலும் சூரத்திலிருந்து ஸ்ரீ தயாள்ஜி, கல்யாண்ஜி முதலியவர்களும் வந்து சேர்ந்தார்கள். 29வ பர்தோலி தாலுகா மகாநாடு நடைபெற்றது. ஆயிரக் கணக்கான பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். ஆயினும் ஒருவிதமான குழப்பமோ, கூச்சலோ இல்லாமல் மகாநாடு நடந்தது. காந்தி மகான் எங்கே சென்று தங்கினாலும் அங்கே உள்ளூர் ஜனங்கள் வந்து கூட்டம் போடுவது சர்வ சாதாரண வழக்கம் அல்லவா? ஆனால் பர்தோலியில் மகாத்மா காந்தி தங்கியிருந்த ஜாகைக்கு அநாவசியமாக யாரும் வரவேயில்லை.

பர்தோலி பிரதிநிதிகளில் முக்கியமான சிலரை மகாத்மாவே தமது ஜாகைக்குக் கூப்பிட்டனுப்பினார். பொதுஜனச் சட்ட மறுப்புக்குக் காந்திஜி விதித்திருந்த நிபந்தனைகளில் ஒன்று பர்தோலியில் வாழும் 88,000 ஜனங்களுக்கும் வேண்டிய துணியை அவர்களே இராட்டை — கைத்தறியில் உற்பத்தி செய்து கொள்ள வேண்டும், வெளியிலிருந்து ஒரு கஜம் துணிகூட வரவழைக்கக்கூடாது என்பது. இந்த நிபந்தனையைப் பூரணமாக நிறைவேற்றுவதற்கு இன்னும் பதினைந்து நாள் தவணை கொடுப்பதாக மகாத்மா கூறினார். ஆனால் பர்தோலி தலைவர்களை "எங்களுக்குத் தவணை வேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டார்கள். பிப்ரவரி மீ 1வ யிலிருந்து ஒரு அங்குலத் துணிகூட

டாரே! இதற்குத்தான் 'நான் வரவில்லை' என்று சொன்னேன். என்ன பண்ணுவேன், மாமி!" என்று பதறினாள்.

மாமி எவ்வளவோ சமாதானப் படுத்தினாள். கோமதியின் மனம் சமாதானம் அடையவில்லை. "என்னத்துக்கு இவ்வளவு சுதந்திரம் எடுத்துக் கொண்டு தெப்பம் பார்க்க வந்தோம்!" என்று விம்மிக்கொண்டே வீடு வந்து சேர்ந்தாள். "யாரைக் கேட்டுக்கொண்டு வீட்டைப் பூட்டிக்கொண்டு போனாய்?" என்ற கர்ஜனையை அந்த நிமிஷமே அவள் எதிர்பார்த்தாள்.

"வந்து ரொம்ப நேரம் ஆயிற்றோ......? அடுத்த வீட்டு மாமி பிடிவாதப் படுத்திக் கூப்பிட்டார்கள்......" என்று கோமதி இழுத்தாற் போலச் சொல்லிக்கொண்டே படி ஏறினாள். அவளுடைய தேகம் 'கிடு கிடு' வென்று ஆடிற்று.

"பரவாயில்லை, என்னால்தான் அழைத்துக்கொண்டு போக முடியவில்லை; நீயாகப் போனது குறித்துச் சந்தோஷம்" என்று ராகவன் கூறிவிட்டு எழுந்தான். கோமதிக்கு அவர் உண்மையில் அப்படிச் சொல்லுகிறாரா, அல்லது கோபத்தை அடக்கிக்கொண்டு பரிகாசமாகக் கூறுகிறாரா என்று சந்தேகமாகப் போய் விட்டது. கணவனது முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே கதவைத் திறந்தாள். "சந்தர்ப்பம் பார்த்துச் சொல்; இப்போது வேண்டாம்!" என்று அடுத்த வீட்டு மாமி கோமதியின் காதோடு சொல்லிவிட்டுப் போனாள்.

### 3

அன்று இரவு நல்ல நிலவு; கோமதியும் ராகவனும் மொட்டை மாடியில் பேசிக் கொண்டிருந்தனர். கோமதி மெதுவாக ஆரம்பித்தாள். "......சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே! தெப்பம் பார்க்கப் போனபோது நம்ப குழந்தை கைவளையலில் ஒன்றைக் காணவில்லை. நழுவி விழுந்து விட்டதோ, அல்லது எவனாவது......" என்று சொல்லும்போதே துக்கம் தொண்டையை அடைத்தது. கண்கள் 'மளமள'வென்று கண்ணீரைப் பொழிந்தன.

ராகவன், "ஒரு கை வளையல்தானே? போனால் போகிறது! இதற்காக என்னத்திற்கு இப்படி வருத்தப் படுகிறாய்?" என்று கூறியபடியே அவளை அருகே இழுத்துக் கண்ணீரைத் துடைத்தான். "எவ்வளவு ஆச்சரியமான மனிதர்! இவரிடம் கோபித்துக் கொண்டு அசடு மாதிரி மத்தியான மெல்லாம் உட்கார்ந்து கொண்டிருந்தோமே!" என்று மனம் புழுங்கினாள் கோமதி.

சிறிது நேரத்துக்கெல்லாம் ராகவன், "கோமு! சொன்னால் நீ கோபித்துக் கொள்ள மாட்டாயே? அந்த ஒரு வளையலைத் திருடியது வேறு யாரும் இல்லை; நான்தான். எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடு. ஒருவரிடம் பத்து ரூபாய் கைமாற்று வாங்கி யிருந்தேன். அவருக்கு மிக அவசரம் என்று தொந்தரவு படுத்திவிட்டார். உன்னிடம் பணமில்லை என்று தெரியும். எனவே முன்பின் யோசிக்காமல் தூளியில் படுத்திருந்த குழந்தையின் வளையலைக் கழற்றி எடுத்துக் கொண்டுபோய் அடகு வைத்து அவருக்குப் பத்து ரூபாய் வாங்கிக் கொடுத்தேன். என்னை மன்னிப்பாயா?" என்றான்.

"என்னைக் கேட்டிருந்தால் இன்னொன்றையும் கழற்றிக் கொடுத்திருப்பேனே?" என்று கோமதி சொன்ன போது, அந்த இதயம் எப்படிப்பட்டது என்று ராகவன் புரிந்து கொண்டான்.

போயிருக்கிறது. அதனால்தான் எப்போது கேட்டாலும் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி விட்டுப் போய் விடுகிறார்!" என்ற முடிவுக்கு வந்தாள் கோமதி.

## 2

அடுத்த வீட்டு மாமி, "கோமதி! உன்னை ஐந்து, ஆறு குரல் கூப்பிட்டேன்; காதில் விழவில்லையா, என்ன? ஏன், என்னமோ போயிருக்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தாள்.

"ஒன்றுமில்லை, மாமி!" என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள் கோமதி.

"குடும்பம் என்றால் நாலும்தான் இருக்கும். எல்லாவற்றையும் சரிக்கட்டிக்கொண்டு போகிறவள்தான் கெட்டிக்காரி" என்று மாமி கூறிவிட்டு, "தெப்பத்திற்குப் போகிறேன், வருகிறாயா?" என்றாள்.

'தெப்பம்' என்றதும் 'சுருக்' கென்றது கோமதிக்கு. "இல்லை, மாமி! வேலை இருக்கிறது. சற்றுப் போனால் அவர் 'காப்பி, காப்பி' என்று பறந்து கொண்டு வந்து விடுவார்!" என்றாள். அவள் குரலிலே ஏதோ வொரு ஏக்கம் பிரதிபலித்தது.

"அதற்கு என்ன? போனோம், வந்தோம் என்று வந்து விட்டால் போச்சு! ஒரு நாளைக்குக் காப்பிக்குக் கொஞ்சம் தாமதமானால் என்ன? கிளம்பு!" என்று அந்த மாமி கூப்பிட்டபோது, கோமதியினால் கிளம்பாமல் இருக்க முடியவில்லை. "அவர்தான் என்னைத் தெப்பத்திற்கு அழைத்துக் கொண்டு போகவில்லை. இனி இருட்டின பிறகு தானே வரப்போகிறார்? அதற்குள் திரும்பி வந்து விட்டால் போயிற்று" என்று நினைத்துச் 'சட்' டென்று தன்னைச் சிங்காரித்துக் கொண்டாள். குழந்தையை அவசரமாக எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு, கதவைப் பூட்டிச் சாவியை இடுப்பில் செருகிக் கொண்டு மாமியுடன் கிளம்பினாள்.

தெப்பம் பார்த்துவிட்டுத் திரும்பிய கோமதி குழந்தையின் கையைப் பார்த்து விட்டுத் திகில் அடைந்தாள். "மாமி! ஒரு கை தங்க வளையலைக் காணோமே!" என்று அலறினாள். அவளுடைய நெஞ்சும் மார்பும் படபட வென்று அடித்துக் கொண்டது. "மாமி! அவருக்குத் தெரிந்தால் என்ன சொல்லுவாரோ? எந்தப் படுபாவி கழற்றிக் கொண்டு போனானோ?" என்று துடித்தாள். "காலையிலேயே எனக்கும் அவருக்கும் இந்தத் தெப்ப உற்சவ விஷயமாகச் சண்டை! இப்போது எல்லாவற்றிற்கும் சேர்த்து என்னைச் சும்மா விடமாட்

சொஜ்ஜிக்கும், பஜ்ஜிக்கும்தான் நஷ்டம் என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

கோமதியைப் பார்த்துவிட்டு, "ஆடத் தெரியுமா?" என்று ராகவன் கேட்ட போது அவர்கள் உண்மையிலேயே ஆடித் தான் போனார்கள். "இல்லை, இன்னும் நாங்கள் கற்றுக் கொடுக்கவில்லை" என்று இழுத்தார்கள்.

"நல்ல வேளை! எங்கே ஆடத் தெரியும் என்று சொல்லி விடுவீர்களோ என்று பயந்து கொண்டிருந்தேன். குடித்தனம் நடத்தும் பெண்ணுக்கு அளவுக்கு மீறிய அழகும், ஆட்டமும் என்னத்துக்கு? எனக்கு உங்கள் பெண்ணை மிகவும் பிடிக்கிறது. முகூர்த்தம் எப்போது வைக்கப் போகிறீர்கள்?" என்று ராகவன் கேட்ட போது அசந்து போனார்கள். நமஸ்காரம் செய்துவிட்டு உள்ளே போன கோமதி, கதவிடுக்கு வழியாக ராகவன் சொன்னதைக் கேட்டபோது, "நிஜந்தானா!" என்று பிரமித்துப் போனாள். அதற்குள் தன் கணவன் மனம் கோரும் படிதான் எப்போதுமே நடந்து கொள்ளக்கூடாது என்று வேறு தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

தீர்மானம் தனிக் குடித்தனம் வைத்த இரண்டு, மூன்று வருஷங்கள் வரையில் தான் பயனளித்தது. அண்டை அயலில் உள்ள எத்தனையோ தம்பதிகள் கை கோர்த்துக் கொண்டு ஜோடி ஜோடியாக உலாவப் போவதைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு என்னவோபோலிருக்கும். சமைத்துப் போடுவதற்கும், தொட்டில் ஆட்டுவதற்கும் மட்டுந்தானா தான் என்று எண்ணி மனம் புழுங்கினாள்.

"வீட்டுக்கு வந்தால் என்னென்னவோ குழைகிறாரே. ஒரு நாளாவது தேர், திருவிழா, கடைத் தெரு என்று பின்னோடு அழைத்துக் கொண்டு போகிறாரா?" என்று நினைக்க ஆரம்பித்து விட்டாள். நாள் ஆக ஆக அந்த நினைவு விபரீதப் பாதையில் செல்ல ஆரம்பித்து விட்டது. "நான் கறுப்பு; என்னைப் பின்னோடு அழைத்துச் செல்ல வெட்கப்படுகிறார்



# கள்ளமும் உள்ளமும்

பி.கே.எம்

கதவைப் 'பட்'டென்று சாத்திக் கொண்டு உள்ளே போனாள் கோமதி. கதவுக்கு வாய் இருந்தால் "புருஷன் மேல் கோபித்துக் கொண்டு என்னை இந்தப் பாடு படுத்துகிறாயே!" என்று கட்டாயம் கேட்டிருக்கும்.

உள்ளே வந்த கோமதி 'உம்'மென்று முகத்தை வைத்துக்கொண்டு, வழக்கமாகக் கோபம் வந்தால் உட்காரும் இடமான அந்த மாடி ஏறும் முதல் படியில் உட்கார்ந்தாள்.

அவளுக்கு அழுகை வந்தது; ஆத்திரம் வந்தது. "என்னத்தை அப்படிப் பிரமாதமாகக் கேட்டுவிட்டோம்? இதற்கு இப்படிக் கோபித்துக் கொண்டு போகிறாரே!" என்று பொருமினாள்.

அப்பாமீது கோபித்துக் கொண்டு அம்மா அரை மணி நேரமாக விம்முவது தொட்டிலில் படுத்துக் கொண்டிருந்த ராஜாப் பயலுக்குப் பிடிக்கவில்லை. தன்னுடைய கட்டை விரலை ருசி பார்ப்பதை விட அப்பாவின் கோபத்துக்கு மாற்றுத் தேடுவது மிக முக்கியம் என்று நினைத்து 'வீல்' என்று கத்தினான். "ஆமாண்டாப்பா! நீயும் எழுந்து விட்டாயா? எனக்கு என்ன குறைச்சல்?" என்று சொல்லிக்கொண்டே எழுந்து போனாள் கோமதி.

சற்று முன் நடந்தது அதற்குள் மறந்துவிடுமா?

கோமதியின் கணவன் ராகவன் சாப்பிட்டு முடிந்ததும் சட்டையை மாட்டிக் கொண்டான். "இன்று ஞாயிற்றுக் கிழமை என்பதை மறந்து விட்டீர்களா, என்ன? இன்று கூடவா ஆபீஸுக்குப் போகவேண்டும்?" என்று கேட்டுக் கொண்டே அவன் முன் வந்து நின்றாள் கோமதி.

ராகவன் அவள் கேட்பதை அவ்வளவாக லட்சியம் செய்யாமல் சட்டைக்கு மேலே கோட்டை மாட்டிக் கொண்டு, "இன்று வேறு வேலை இருக்கிறது; போக வேண்டும். ஏன், எதற்குக் கேட்கிறாய்?" என்று சற்றுப் படபடப்புடன் கேட்டான்.

"இல்லை, நேற்று தெப்பத்திற்கு அழைத்துக் கொண்டு போவதாகச் சொன்னீர்களே என்று கேட்டேன்" என்று சொன்ன கோமதியின் குரல் மங்கிற்று.

"ஆமாம், சொன்னேன். இன்று இப்படிச் சொல்லுகிறேன். சரி, நகரு! குறுக்கே நின்றுகொண்டு பசப்பாதே! தெப்பத்திற்குப் போகாவிட்டால் உங்கள் வீட்டுக் கப்பல் கவிழ்ந்து விடுமோ?" என்று கடுகடுப்புடன் கூறிவிட்டு 'விர்'ரென்று கிளம்பி விட்டான் ராகவன்.

ராகவனுக்கு ஞாயிற்றுக்கிழமை ஆபீஸ் இல்லை என்பது கோமதிக்கு நன்றாகத் தெரியும். அதுதான் சீட்டாட்டம்! அந்த '304' ஆட்டம் ஆடாமல் போனால் ராகவனுக்குத் தலை தெறித்துவிடும். எந்த வேலை எப்படி இருந்தாலும் ஞாயிற்றுக் கிழமை சீட்டாடப் போவதை அவன் மறப்பது இல்லை. கோமதி அதற்கு எவ்வளவோ முட்டுக்கட்டை போட்டுப் பார்த்தாள். அவளது அழகுக் கொஞ்சல், கெஞ்சல், முல்லைச் சிரிப்பு, இனிய 'டிபன்' எதுவுமே '304'க்கு '144' போட முடியவில்லை.

கோமதிக்கு இதுதான் ரொம்ப ஆத்திரமாக இருந்தது. சீட்டாடப் போகிறவர், வேறு முக்கியமான வேலை என்று எதற்குப் பொய் சொல்லிவிட்டுப் போக வேண்டும்?

ராகவனுக்கு வாழ்க்கைப்பட்டு விளையாட்டுப்போல ஆறு வருஷங்கள் ஆகிவிட்டன. கடந்த அரை மகாமக காலத்திற்குள் அவனைக் கட்டிக்கொண்டு அவள் என்ன சுகத்தைக் கண்டாள்?

இத்தனைக்கும் மாமியார், நாத்தனார் இல்லாத குடும்பம்; மாடு, கன்று என்ற பிச்சுப் பிடுங்கலும் கிடையாது. ஒண்டுக் குடித்தன அவஸ்தைக்குக்கூட அவள் ஆளாகவில்லை. ராகவனுக்கு ரேஷன் ஆபீஸில் வேலை. ஆரம்பத்தில் "கோமு! கோமு!" என்று அவள் பேரில் அவன் தன் உயிரையே வைத்திருந்தான்.

கோமு கொஞ்சம் கறுப்பு. கறுப்பு என்றாலும் மோசம் இல்லை. அவள் அப்பாவும், அம்மாவும் விழுந்து விழுந்து வெள்ளைக் கற்களாகப் பார்த்துப் பொறுக்கி எடுத்து நகைகளாகப் பண்ணிக் குவித்து இருந்தார்கள். கறுப்பாக இருக்கிறாளே கோமதி. இவளுக்குக் கல்யாணம் ஆக வேண்டுமே என்று அவளுடைய பெற்றோர் கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது, எங்கிருந்தோ வந்து 'தொப்'பென்று குதித்தான் ராகவன்.

அவன் பெண்ணைப் பார்த்து முடிவு சொல்லும் வரையில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. பையனுடைய சிவப்பு நிறத்துக்கும், களையான முகத்துக்கும் கோமதியை எங்கே பிடிக்கப்போகிறது?—

ஸ்வாமி! ஒரே ஒரு விஷயம். தாங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. அந்தாத்மாவின் ஆணைக்கு உட்பட்டு நடக்கும்பொழுது, பிறருடைய சௌகரிய சௌகரியங்களையும் கவனித்து அதன்படி நடக்க வேண்டியது மனிதனுடைய கடமை அல்லவா?" என்று கேட்டாள் யசோதரா.

பீஜகுப்தனுடைய முகம் வெட்கத்தினால் ஒரேயடியாக வெளுத்துப் போய்விட்டது. "யசோதரா தேவி! தாங்கள் சொல்லுவது மிகவும் நியாயமான வார்த்தை! என்னை மன்னிக்க வேண்டும். ஏதோ அவசரப்பட்டுச் சொல்லிவிட்டேன். உங்களுடைய சௌகரியத்தையும் அநுசரிக்க வேண்டியது என்னுடைய கடமைதான். தங்களுக்கு எப்பொழுது சௌகரியமோ, அப்பொழுதே நானும் புறப்படுகிறேன்" என்றான்.

"இல்லை, ஸ்வாமி! எனக்கு ஒருவிதமான அசௌகரியமும் இல்லை. தாங்கள் எப்பொழுது புறப்படுகிறீர்களோ, அப்பொழுதே நாங்களும் புறப்பட்டுவிடுகிறோம். ஒரு கணமும் தாமதிக்க மாட்டோம். பிறருடைய சௌகரியத்தையும் கவனிக்க வேண்டியது அவசியம் என்று நான் ஒரு வார்த்தைக்காகச் சொன்னேனே தவிர வேறு ஒன்றும் இல்லை. எங்களுக்காக நீங்கள் சிரமப்படக்கூடாது. நாளை சாயந்திரத்துக்குள் நாங்கள் புறப்பட ஏற்பாடு செய்து கொண்டால் போதும் அல்லவா?—சில சாமான்கள் விலைக்கு வாங்கவேண்டியிருக்கிறது. நாளைக்குச் சேவகர்களைக் கடைத் தெருவுக்கு அழைத்துக் கொண்டு போய் அந்தச் சாமான்களை வாங்கி வந்துவிடலாம் என்று எண்ணுகிறேன்" என்றாள் யசோதரா.

(தொடரும்)

## காலக்ஷேபம்

"என் அப்பா, இந்த பிஸ்கோத்தின் விலை பவுண்டு ஐந்து ரூபாய் என்கிறாயே! பேப்பரில் போட்டிருக்கிறானே, ஒரு பவுண்டு விலை மூன்று ரூபாய் என்று?"

"ஒரே விலை ஐந்து ரூபாய்தான்; இல்லையென்றால் அந்தப் பேப்பர்க்காரனிடமே போய் வாங்கிக் கொள்ளுங்கள்!"

○●○

சிறைச்சாலையில் இருந்த ஒரு கைதியை அவன் சிநேகிதன் பார்க்க வந்தான். அவன் அநுதாபம் காட்டுகிற பாவனையில், "ஏன் உன்னைத் தண்டித்தார்கள்?" என்று கேட்டான்.

அதற்குக் கைதி கோபத்துடன், "அந்த முட்டாளை வக்கீலாக வைத்தேன். அவன் நீதிபதியைப் பார்த்து, 'நியாயம் வழங்க வேண்டும், நியாயம் வழங்க வேண்டும்' என்று ஓயாமல் கத்தினான். நீதிபதிக்குக் கோபம் வந்து நியாயத்தை வழங்கி விட்டார். நான் இங்கே வந்து மாட்டிக் கொண்டேன்!" என்றான்.

○●○

ஒரு பஸ் கோரமான விபத்துக்குள்ளாக நேர்ந்தது. அது ஒரு மரத்தில் மோதிக் கொண்டதில் சில பிரயாணிகளுக்குப் படுகாயம் ஏற்பட்டதுடன், பஸ்ஸும் நொறுங்கி விட்டது. டிரைவரைக் கைது செய்து போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனார்கள்.

இன்ஸ்பெக்டர் (டிரைவரைப் பார்த்து):—உன்னுடைய முதலாளி உனக்கு ஜாமீன் கொடுத்து அழைத்துக் கொள்ளுவாரா?

டிரைவர்:—அழைத்துக் கொள்ளலாம் — பஸ்ஸைப் பார்ப்பதற்கு முன் என்னைப் பார்த்தால்!

○●○

உபாத்தியாயர்:—கிட்டு, நீ எழுதிக் கொண்டு வந்த கட்டுரையில் "ஏழே கால் மணி அடித்தது" என்று எழுதியிருக்கிறாய் அது பிசகு. கடிகாரம் கால் மணி அடிக்காது.

கிட்டு:—அப்படி இல்லை, ஸார்! எங்கள் வீட்டுக் கடிகாரம் கால் மணி நேரம் மெதுவாகப் போகிறது!

ஒரு கண நேரத்துக்கு ஒன்றுகலந்தன. இருவரும் கண் கொட்டாமல் ஒருவரையொருவர் சில கண நேரம் பார்த்துக் கொண்டனர். யசோதராவின் கண்களில் நாணமோ சங்கோசமோ சிறிதும் உண்டாகவில்லை. அவளுடைய அழகிய கண்களிலே ஒருவித ஒளி வீசியது; தெளிவு தாண்டவமாடியது; நேர்மை தவழ்ந்தது; கபடமின்மை தென்பட்டது. பீஜகுப்தனுடைய நரம்புகளிலே ரத்தம் வெகு வேகமாக ஓடத்தொடங்கியது. இதயம் துடித்தது. உடல் முழுவதும் ஒருவித உணர்ச்சி மின்வேகத்தில் வியாபித்தது. அடுத்த கணம் உள்ளத்திலே உவகை பொங்கி வந்து உடலில் புல்லரிப்பை உண்டு பண்ணியது. பீஜகுப்தன் சட்டென்று யசோதராவின் மீது லயித்திருந்த தன் பார்வையை அகற்றினான். அடுத்த கணம் அவனுடைய பார்வை பக்கத்திலிருந்த சுவேதாங்கன் மீது விழுந்தது. சுவேதாங்கன் அப்பொழுது அவனையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். பீஜகுப்தனுடைய உள்ளத்து உணர்ச்சிகளைச் சுவேதாங்கன் அறிந்து கொண்டுவிட்டான் என்பதை எடுத்துக் காட்டுவது போலிருந்தது சுவேதாங்கன் பார்த்த அந்தப் பார்வை. பீஜகுப்தனுக்குத் தன்மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. அதுமட்டும் அல்ல; சுவேதாங்கன் மீதும்கூட அவனுக்குக் கோபம் பொங்கி வந்தது. உடனே அவன் மிகவும் கடுமையான குரலில், "சுவேதாங்கா!" என்று அழைத்தான்.



"என், ஸ்வாமி?" என்று மிகவும் பணிவாகக் கேட்டான் சுவேதாங்கன்.

அதற்குள் பீஜகுப்தன் தன்னை அடக்கிக் கொண்டு விட்டான்; ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டும் விட்டான். "ஒன்றும் இல்லை... ஆமாம், நாம் இங்கே வந்து எவ்வளவு நாட்கள் ஆயிற்று?" என்று கேட்டான்.

பீஜகுப்தன் சொல்ல நினைத்ததைச் சொல்லவில்லை என்பதைச் சுவேதாங்கன் புரிந்துகொண்டு விட்டான். அவன் விரல் விட்டு ஏதோ கணக்குப் பார்த்து, "எட்டு நாட்கள் ஆகின்றன" என்று சொன்னான்.

"அப்படியா? அப்படியானால் நாம் சீக்கிரம் பாடலிபுத்திர நகரத்துக்குத் திரும்பிப்போய்விட வேண்டியதுதான்!" என்றான் பீஜகுப்தன். பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் சுவேதாங்கனின் காதருகில் தன் வாயைக் கொண்டு போய், சுவேதாங்கனுக்கு மட்டும் கேட்கும்படியாக, "சித்திரலேகாவை எவ்வளவு முயன்றும் என்னால் மறக்க முடியவில்லை. மறக்க முடியவும் முடியாது போலத் தோன்றுகிறது. ஆகவே பாடலிபுத்திரத்துக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடு செய்!" என்று கட்டளையிட்டான்.

பீஜகுப்தன் திடீரென்று தன்னுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு விட்ட விஷயத்தில் சுவேதாங்கனுக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. மிருத்யுஞ்ஜயருக்கும் யசோதராவுக்கும் வியப்பு மேலிட்டது. மிருத்யுஞ்ஜயர் மிகவும் ஆவலுடன், "உன்னையிலேயே உடனே திரும்பிப் போய்விட வேண்டும் என்பதுதான் பீஜகுப்தனுடைய நோக்கமோ?" என்று கேட்டார்.

பீஜகுப்தன் தலைகுனிந்து கொண்டான். "ஸ்வாமி! என்னை மன்னிக்க வேண்டும். என்னிடம் எப்பொழுதுமே ஒரு பெரிய கெட்ட குணம் உண்டு. நான் உள்ளத்து உணர்ச்சிகளுக்கு அதிகம் மகத்துவம் கொடுப்பவன்; அந்தராத்மாவின் ஆணைக்கு அடங்கி நடப்பவன். இன்னும் ஒரு மணி நேரத்துக்குப் பின் நான் என்ன செய்வேன் என்பது எனக்குத் தெரியாது. இப்பொழுது திடீரென்று எனக்குப் பாடலிபுத்திரத்தின் நினைவு வந்தது. காசி கட்டோடு பிடிக்காமற் போய்விட்டது. காசியில் இனி ஒரு கணம் தாமதிப்பதென்றாலும் அது எனக்கு மிகவும் சிரமசாத்தியமாகத் தோன்றுகிறது" என்று சொன்னான்.

"அப்படியானால் எப்பொழுது புறப்படுவதாக உத்தேசம்?—நாங்களும் புறப்படுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் அல்லவா?

தங்களுக்குப் பாடலிபுத்திர நகரம் அல்லவா பிடித்திருப்பது போலத் தோன்றுகிறது?" என்று யசோதரா மிகவும் வியப்புடன் கேட்டாள்.

"அதற்குள் அவசரப் படுகிறீர்களே! விஷயம் இத்துடன் முடிந்து விடவில்லை. இன்னொரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். எல்லோருக்கும் எப்பொழுதுமே ஒரே விதமான சூழ்நிலை பிடிப்பதில்லை. இதற்கு உதாரணம் ஒன்று கேளுங்கள். தினம் அறுசுவை உண்டி உண்டு பழகியவனுக்கு என்றைக்காவது ஒரு நாள் வற்றல் குழம்பும் சாதமும் கிடைத்து விட்டால், அது அவனுக்குத் தேவாமிர்தமாகத் தோன்றுகிறது. அவனுக்கு அப்படித் தோன்றுவதற்குக் காரணம் என்ன? தினம் அறுசுவை உண்டியே உண்டு பழகிய அவனுக்கு அது அலுத்து விடுகிறது! சலித்து விடுகிறது. ஆகவே அவன் வேறு பொருளை விரும்புகிறான். அப்பொழுது அவனுக்கு வற்றல் குழம்பும் சாதமும் தேவாமிர்தமாகத் தோன்றினால் ஆச்சரியம் இல்லை அல்லவா? இதெல்லாம் எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால் மாறுதலை விரும்புவது தான் மனிதனுடைய இயல்பு; பிறவிக் குணம் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகத்தான். அதே போல ஒரே சூழ்நிலையில் பழகிப் பழகி அலுத்துப் போன நமக்குச் சில தினங்களாவது வேறு சூழ்நிலைக்குச் சென்று தங்கவேண்டும் என்று தோன்றினால் அது சகஜம்தானே? பாடலிபுத்திர நகரத்திலேயே பிறந்து வளர்ந்து பழகிய எனக்குப் பாடலிபுத்திர நகரத்துச் சூழ்நிலை சற்று அலுத்துவிட்டது. மாறுதலை விரும்பி நான் காசிக்கு வந்தேன். காசியின் சூழ்நிலை எனக்கு இன்னும் அலுக்கவில்லை. ஆகவேதான் எனக்கு இப்பொழுதெல்லாம் காசி தான் பிடித்திருக்கிறது என்று நான் சொன்னேன். இதில் என்ன தவறு?" என்று கேட்டான் பீஜகுப்தன்.



அதைக் கேட்டதும் யசோதரா 'களீர்' என்று சிரித்தாள். "ஸ்வாமி! தங்களிடம் மிகவும் விசித்திரமானதொரு மேதை இருக்கிறது. தங்களுடைய தர்க்கங்களுக்குப் பதில் அளிப்பது என்பது மிகவும் சிரம சாத்தியமான காரியம்" என்றாள். பிறகு சுவேதாங்கனைப் பார்த்துச் சிரித்தவாறே, "ஸ்வாமி! அறிவு தர்க்கத்துக்கு உட்பட்ட பொருள் அல்ல; அப்பாற்பட்ட பொருள். ஆகவே தாங்கள் பீஜகுப்த மன்னரிடம் மிகவும் ஜாக்கிரதையாகப் பழகவேண்டும்" என்று எச்சரித்தாள்.

சுவேதாங்கனும் சிரித்துக் கொண்டு, "யசோதரா தேவி! நானும் பீஜகுப்த மன்னரும் ஒரே குருவினிடத்தில் கல்வி பயின்றவர்கள். நாங்கள் இருவரும் சகோதரர்கள் போன்றவர்கள். நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால், நான் என் குருநாதரான மகாப் பிரபு ரத்னாம்பரிடம் கூட ஜாக்கிரதையாகப் பழக வேண்டும் என்று சொல்லுவதுபோல் அல்லவா இருக்கிறது!" என்றான்.

யசோதரா சற்றுத் தயங்கி "நான் அதை எப்படிச் சொல்ல முடியும்?" என்றாள்.

"ஏன் சொல்லக் கூடாது, யசோதரா தேவி? எதுவும் சொல்லலாம். உங்களுக்குச் சரியென்று தோன்றுவதைச் சொல்லுவதில் அநாவசியமான சங்கோசம் எதற்கு?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

"சங்கோசம் ஒன்றும் இல்லை, ஸ்வாமி! உங்களைப் பற்றி நான் எது வேண்டுமானாலும் சொல்லலாம். ஏனென்றால் நான் தங்களுடன் அதிகமாக நெருங்கிப் பழகியிருக்கிறேன். தாங்கள் எதையும் வித்தியாசமாகவோ தவறாகவோ எடுத்துக் கொள்ள மாட்டீர்கள். இன்னொரு விஷயம். உங்களுக்கும் எனக்கும் அதிக வித்தியாச மனோபாவம் கூடக் கிடையாது. ஆனால் மகாப் பிரபு ரத்னாம்பர் .........அவர் பூஜிக்கத் தகுந்தவர். அவரைப் பற்றி..." என்று வாக்கியத்தை முடிக்காமலேயே அரைகுறையாக நிறுத்திவிட்டாள் யசோதரா.

பீஜகுப்தன் யசோதராவைப் பார்த்தான். யசோதரா பீஜகுப்தனைப் பார்த்தாள். இருவருடைய கண்களும்

எல்லோரும் ஓடத்தில் ஏறி உட்கார்ந்தனர். கட்டியிருந்த ஓடம் அவிழ்த்து விடப்பட்டது. அது மெதுவாக அசைந்து ஆடிக்கொண்டு கங்கைப் பிரவாகத்தில் மிதக்கத் தொடங்கியது. நாற்புறமும் எங்கு பார்த்தாலும் கங்கையின் நீர்ப்பரப்பிலே கணக்கு வழக்கற்ற ஓடங்கள் உல்லாசமாக மிதந்து சென்று கொண்டிருந்தன. ஒரு ஓடத்தில் பாட்டு, ஒரு ஓடத்தில் கூத்து; இன்னொரு ஓடத்தில் வாத்திய கோஷம். வேறொரு ஓடத்தில் கலகலவென்ற உல்லாசப் பேச்சு; மற்றொரு இடத்தில் 'கலீர்' என்ற சிரிப்பு ஒலி—இப்படியாகக் கங்கை நதியின் நீர்ப்பரப்பு முழுவதும் ஒரே குதூகலமாகக் காணப்பட்டது.

ஓடம் சிறிது தூரம் நகர்ந்து சென்றதும் யசோதரா சுவேதாங்கனைப் பார்த்து, "ஸ்வாமி! உங்களுக்குக் காசி நகரம் பிடித்திருக்கிறதா அல்லது பாடலி புத்திர நகரம் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டாள்.

சுவேதாங்கன் சிறிதுநேரம் வரை யோசனையில் ஆழ்ந்தான். பிறகு, "எனக்கா?



எனக்குப் பாடலிபுத்திர நகரம்தான் மிகவும் பிடித்திருக்கிறது. ஏனென்றால் பாடலிபுத்திரத்தைப் போன்ற ஐசுவரியமும் வைபவமும் இங்கே காசியில் கிடையாது. காசியோ கல்விக்கு உறைவிடம்!" என்று பதில் அளித்தான்.

"என் ஸ்வாமி! உங்களுக்கு எந்த இடம் பிடித்திருக்கிறது?" என்று பீஜகுப்தனைப் பார்த்துக் கேட்டாள் யசோதரா.

"எனக்கு இப்பொழுதெல்லாம் காசிதான் பிடித்திருக்கிறது" என்று சொன்னான் பீஜகுப்தன்.

"இப்பொழுதெல்லாம் என்று சொன்னால் என்ன அர்த்தம்?" என்று மறுபடியும் கேட்டாள் யசோதரா.

"யசோதரா தேவி! ஒரு இடம் பிடிப்பதோ பிடிக்காமலிருப்பதோ சூழ்நிலையின் தன்மையைப் பொறுத்திருக்கிறது. சூழ்நிலை அநுகூலமானதாக இருந்தால்தான் நமக்கு ஒரு இடம் பிடிக்கும். இல்லாவிட்டால் பிடிக்காது. உண்மையைப் பார்க்கப் போனால் நாம் இடத்தை விரும்புவதில்லை. இடம் என்பது என்ன? கேவலம் ஒரு ஜடப்பொருள் தானே? நாம் ஜட பதார்த்தத்தையா விரும்புகிறோம்? இல்லையே! நமக்குப் பழக்கப்பட்ட சூழ்நிலையைத் தானே நாம் விரும்புகிறோம்? முதலாவதாக ஒவ்வொரு மனிதனும் தான் பிறந்து வளர்ந்த இடத்தைத்தான் மிகவும் விரும்புகிறான். எப்பொழுதும் மனிதன் தன் பிறந்த ஊரிலேயே இருப்பதனால் அவனுக்குப் பல நண்பர்கள் அங்கே ஏற்பட்டு விடுகிறார்கள். மனிதர்களாகப் பிறந்த நம்முடைய வாழ்க்கை வெறும் ஜடப்பொருளால் ஆனதல்ல; அசையும் தன்மைவாய்ந்த சேதனப் பொருளால் ஆனது. ஆகவே பிறந்து வளர்ந்த ஊரிலேயே பெரும்பாலான வாழ்க்கையைக் கழிக்கும் நமக்குப் பல மனிதர்களுடன் அங்கே சேர்ந்து நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் கிட்டுகிறது; நட்புப் பூணும் பாக்கியமும் வாய்க்கிறது. அப்படியிருக்கும்பொழுது நான் என்னுடைய பிறந்த இடமாகிய பாடலிபுத்திர நகரத்தைத்தான் அதிகம் விரும்புகிறேன் என்று சொன்னால் அது மிகையாகாது. பிறந்த இடத்திலே பிரியம் கொள்ளுவது இயல்புதானே?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

"இயல்புதான். ஆனால் தாங்களோ எனக்கு இப்பொழுதெல்லாம் காசிதான் பிடித்திருக்கிறது என்று சொன்னீர்கள். இப்பொழுது சொல்லுவதைப் பார்த்தால்

ரதம் வாசலில் நின்று கொண்டிருந்தது. இருவரும் போய் ஏறிக் கொண்டனர்.

நகரத்துக் கோலாகலத்தை வெறுத்து மிருத்யுஞ்ஜயர் ரதத்தைக் கங்கைக் கரையை நோக்கித் திருப்பி விட்டார். கங்கைக் கரையிலே ஓடங்கள் வரிசை வரிசையாகப் புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தன. சுவேதாங்கனும் யசோதராவும் கூட ஒரு ஓடத்தில் ஏறி உட்கார்ந்து புறப்படத் தயாராயிருப்பதைக் கண்டான் பீஜகுப்தன். உடனே அவன், "சுவேதாங்கா! சுவேதாங்கா!" என்று இரண்டு தடவை உரக்கக் குரல் கொடுத்தான்.

அப்பொழுது சுவேதாங்கன் கங்கைப் பிரவாகத்தின் மத்தியில் அசைந்தாடிக் கொண்டு ஆனந்தமாக மிதந்து செல்லும் ஓடங்களைப் பார்ப்பதில் மனதைப் பறி கொடுத்திருந்தான். ஆகையால் பீஜகுப்தன் கூப்பிட்டது அவனுக்குக் காதில் விழவில்லை. யசோதரா அவனுடைய கவனத்தைக் கலைத்து, "அதோ பார்த்தீர்களா? அப்பாவும் பீஜகுப்த மன்னரும் இந்தப் பக்கம் வந்து கொண்டிருக்கிறார்கள்!" என்று சொல்லிச் சுட்டிக் காட்டினாள்.

சுவேதாங்கன் திரும்பிப் பார்த்தான். அதற்குள் ரதமும் அருகில் வந்து நின்று விட்டது. பீஜகுப்தனும் மிருத்யுஞ்ஜயரும் ரதத்திலிருந்து இறங்கினார்கள். அந்தச் சமயம் சிவபூஜை வேளையில் கரடி நுழைந்த கதையாகப் பீஜகுப்தன் அங்கே வந்தது சுவேதாங்கனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தான் கட்டியிருந்த மனக்கோட்டைகள் எல்லாம் கலைந்து விட்டால், யாருக்கும் எரிச்சல் வருவது சகஜம்தானே? சுவேதாங்கனின் முகம் அந்த சமயம் போயிருந்த போக்கைச் சொல்லி முடியாது. அவன் மிகவும் மெதுவான குரலில், "நாசமற்றுப் போக!" என்று முணுமுணுத்துக் கொண்டான். ஆனால் யசோதரா அவன் சொன்னதைக் கேட்டு விட்டாள்.

யசோதரா முகத்தை மிகவும் கடுமையாக வைத்துக் கொண்டு, "ஸ்வாமி! வாழ்க்கையில் அடக்கம் வேண்டும். அடக்கமற்ற வாழ்க்கை ஒரு வாழ்க்கையில்லை" என்றாள்.

யசோதராவின் கடுமையும் கம்பீரமும் வாய்ந்த முகத் தோற்றத்தைக் கண்ட சுவேதாங்கன் நடுநடுங்கிப் போய் விட்டான். இருந்தாலும் அவன் தன்னை எப்படியோ சமாளித்துக் கொண்டு, "அம்மணி! அடக்கத்துக்கும் அன்புக்கும் ஜன்ம விரோதம் ஆயிற்றே!" என்றான்.

அதற்குள் மிருத்யுஞ்ஜயரும் பீஜகுப்தனும் அவர்களுக்கு வெகு சமீபத்தில் வந்து விட்டார்கள்.

சுவேதாங்கனுடைய முகத்திலே தோன்றிய கோபமும் தாபமும், ஏமாற்றமும் அவநம்பிக்கையும் இன்னும் மறைந்தபாடில்லை. பீஜகுப்தன் அருகில் வந்ததும் சுவேதாங்கனுடைய முகபாவத்தை நன்கு உணர்ந்து கொண்டான். ஆகவே பீஜகுப்தன் அவனுடன் ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில், "சுவேதாங்கா! நீங்கள் இருவரும் புறப்பட்டு வந்தபிறகு எங்களுக்கு அங்கே இருப்புக் கொள்ளவே இல்லை. ஆகவே, நாங்களும் புறப்பட்டு வந்து விட்டோம்" என்றான்.

சுவேதாங்கன் ஒருவித வறட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு, "நான்தான் எஜமானரை அப்பொழுதே எங்களுடன் கூடப் புறப்பட்டு வருமாறு வேண்டிக் கொண்டேனே!" என்றான்.



# சித்திரலேகா

ஸ்ரீ. பகவதி சரண் வர்மா

மொழிபெயர்ப்பு: ரா. வீ.



## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## அந்தராத்மாவின் ஆணை

பீ ஜகுப்தன் மிருத்யுஞ்ஜயரைப் பார்த்து, "ஸ்வாமி! தாங்கள் இங்கே காசியில் ஒரு யக்ஞம் செய்யப் போவதாகச் சொன்னீர்களே! தாங்கள் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு விட்டீர்களா, என்ன?" என்று கேட்டான்.

மிருத்யுஞ்ஜயர் சிரித்துக் கொண்டே, "ஆமாம், கொஞ்ச காலத்துக்கு அதை ஒத்தி வைத்திருக்கிறேன். ஏன், பீஜகுப்தா! ஒரு விஷயம் வெகு நாட்களாக எனக்கு விளங்கவே இல்லை. எவ்வளவோ மண்டையை உடைத்துக் கொண்டு பார்த்து விட்டேன். யோசிக்க யோசிக்க அது தீராப் பிரச்னையாக ஆகிறதே தவிரத் தீருவதாகத் தோன்றவில்லை. யக்ஞத்திலே பலியிடும் சம்பிரதாயம் என்று ஒன்று இருக்கிறதே, அதை வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட முடியாதோ?" என்று கேட்டார்.

"ஏன்? எதற்காக அப்படிக் கேட்கிறீர்கள்?" என்று கேட்டான் பீஜகுப்தன். பிறகு இலேசாகச் சிரித்துக் கொண்டு "ஆமாம், தாங்கள் பௌத்த பிக்ஷுக்களின் வலையில் இன்னும் விழவில்லையென்றல்லவா நினைத்தேன்! தாங்கள் சொல்லுவதைப் பார்த்தால் தாங்களும் பௌத்த பிக்ஷுக்களின் வலையில் விழுந்து விட்டீர்களோ என்று அல்லவா ஆச்சரியப்பட வேண்டியிருக்கிறது!" என்றான்.

"இதில் ஆச்சரியப்படுவதற்கு அப்படி என்ன இருக்கிறது? வீணில் இவ்வளவு ரத்தம் சிந்துவதனால் என்ன பயன்? ரத்தம் சிந்துவதும் ஜீவஹிம்சை செய்வதும் தர்மத்துக்கு ஒரு இழுக்கைக் கற்பிக்கும் அல்லவா? பௌத்த பிக்ஷுகள் சொன்னதில் பொருள் இல்லாமற் போகவில்லை" என்றார் மிருத்யுஞ்ஜயர்.

"அது மட்டும் அல்ல; அதில் மாபெரும் உண்மையும் அடங்கியிருக்கிறது" என்றான் பீஜகுப்தன்.

சிறிது நேரம் வரை இருவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தனர். பீஜகுப்தன் ஏதோ நினைத்துக் கொண்டு எழுந்து நின்றான். பிறகு, "ஸ்வாமி! எனக்கு இங்கே உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. நகரத்தைச் சுற்றிப் பார்க்கப் போய் வருவதில் தங்களுக்கு எவ்விதமான ஆட்சேபணையும் இல்லையே!" என்று கேட்டான்.

"போக வேண்டும் என்ற விருப்பமும் இல்லை; போக வேண்டாம் என்ற வெறுப்பும் இல்லை. மனம் சோர்வுற்றிருப்பதனால் தான் அப்படிச் சொன்னேன். உனக்கு எங்கேயாவது போக வேண்டும் என்று தோன்றினால் எனக்கு ஒன்றும் ஆட்சேபணையில்லை. இதோ நானும் புறப்படத் தயாராயிருக்கிறேன்" என்று சொல்லி எழுந்தார் மிருத்யுஞ்ஜயர்.

பெண்" என்ற தலைப்பின் கீழ் அவள் காமிராவுடன் நிற்பது போல ஒரு படம் வெளியிட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் "சிறுத்தையுடன் போராடிய சப்—இன்ஸ்பெக்டர்" என்ற தலைப்பின் கீழ் பூரா விவரமும் வெளியிட்டிருந்தது. அதைக் கண்ட பரிமளத்துக்கு விஷயம் புரிந்தது.



"ஆகட்டும்" என்று கருவிக்கொண்டு பரிமளம் பத்திரிகையை மூடுவதற்கும், சப்—இன்ஸ்பெக்டர் சந்தோஷம் வருவதற்கும் சரியாயிருந்தது.

"உங்கள் காமிரா என் உத்தரவில்லாமல் என்னை எப்படிப் படம் பிடிக்கலாம்?" என்று கேட்டாள் பரிமளம்.

கலகலவென்று நகைத்துக் கொண்டே, "அது மன்னிக்க முடியாத குற்றமா?" என்று கேட்டான் சந்தோஷம்.

"அன்று பஞ்சவர்ணக் கிளியைப் படம் பிடித்தீர்கள் என்று அல்லவா நினைத்தேன்?"

"நானும் பஞ்சவர்ணக் கிளியைத் தானே படம் பிடித்தேன்?"

பரிமளத்தின் முகம் நாணத்தினாலும் கோபத்தினாலும் சிவந்தது. அதைக் கண்ட சந்தோஷம், "பரிமளம், கோபிக்காதே! நம் வேதத்தில் இடது கன்னத்தில் அடித்தால் வலது கன்னத்தைக் காண்பிக்கச் சொல்லியிருக்கிறது. ஒரு படம் பிடித்து விட்டால் இன்னொரு படமும் பிடிக்க வேண்டாமா?—ஏதோ தெரியாமல் செய்து விட்டேன். அதற்குப் பிராயச்சித்தமாகப் பதிலுக்கு என் படத்தை வேண்டுமானால் கொடுக்கிறேன்."

"பிராயச்சித்தமாகப் பதிலுக்குப் படம் வேண்டாம். சீக்கிரமாகக் கலியாணம் செய்து கொண்டு, தங்கள் கலியாணப் படத்தைப் பிடித்துக் கொடுங்கள்!"

"நானே கேட்கலாமென்றிருந்ததை நீயே சொல்லிவிட்டாய்! கரும்பு தின்னக் கூலி கேட்பேனா?" என்றான் சந்தோஷம்.

"சரிதான்; நீங்கள் தவறாக அர்த்தம் செய்து கொண்டீர்களே!" என்றாள் பரிமளம்.

"தவறு ஒன்றுமில்லை; உன் சகோதரரின் விலாசத்துக்கு எழுதி அவருடைய அனுமதியையும் பெற்றுக் கொண்டு விட்டேன்" என்றான் சந்தோஷம்.

"என்ன, ஆச்சரியமாயிருக்கிறதே! நிஜமாகவா சொல்கிறீர்கள்?"

"ஆமாம்."

"முதலில் உங்களுக்கு என் அனுமதி கிடைத்தால்தானே?"

"நான் போலீஸ் டிபார்ட்மெண்டைச் சேர்ந்தவன் என்பது ஞாபகமிருக்கட்டும். என்னுடைய விருப்பத்துக்கு நீ இணங்கவில்லையானால், உன்மேல் நான் பொய்க் கேஸ் தொடருவேன்......"

"எந்தக் குற்றத்திற்காகப் பொய்க் கேஸ் தொடருவீர்கள்?"

"பொய்க் கேஸ் தொடருவது என் வழக்கமில்லை; உண்மையாகவே நீ என் உள்ளத்தைத் திருடியதற்காகக் கேஸ் தொடருவேன்!"

"அதற்கு எனக்கு என்ன தண்டனை கிடைக்கும்?"

"ஆயுள் தண்டனைதான்! என் உள்ளச் சிறையில் உன் ஆயுள் பரியந்தம் நீ கிடக்கவேண்டியதுதான்!"

"தாய் தந்தையற்ற இளம் பெண்ணின் இதயத்தில் அனுமதியின்றிப் புகுந்து கொண்டதல்லாமல் தண்டனையும் அளித்து விடுவேன் என்கிறீர்களே!" என்றாள் பரிமளம் விஷமச் சிரிப்புடன். அவளுடைய சிரிப்பில் சந்தோஷமும் கலந்து கொண்டான்.

சில நாட்களுக்கெல்லாம் உள்ளூர் மாதா கோவிலில் சந்தோஷத்துக்கும் பரிமளத்துக்கும் கல்யாணம் நடந்தது.

அந்தக் 'காமிரா மே'னின் நினைவு மட்டும் வந்துகொண்டே இருக்கும்.

ஒரு மாதம் ஓடி மறைந்தது. அன்று ஞாயிற்றுக்கிழமை. பள்ளிக்கூட மாணவிகளும் உபாத்தியாயினிகளும் மூன்று மைல் தூரத்திலுள்ள ஓதியூருக்கு வன போஜனத்திற்காகப் புறப்பட்டார்கள். வன போஜனமாகி அவர்கள் தங்கியிருந்த சத்திரத்துக்குத் திரும்புவதற்குள் இருட்டும் நேரமாகி விட்டது. அந்தச் சிறுத்தையும் வன போஜனத்திற்காக ஓதியூருக்கே வந்துவிட்டது என்று கேள்விப்பட்டதும், சத்திரத்தின் கதவுகளையெல்லாம் அடைத்துவிட்டு எல்லோரும் படுத்துக் கொண்டார்கள்.

இரவு ஒரு மணி இருக்கும். ஏதோ பெருங் கூச்சல் கேட்கவே பரிமளம் விழித்துக் கொண்டாள். சத்தம் வரவர அதிகமாகியது. சிறுத்தையின் கூச்சலும் மனிதர்களின் கூச்சலும் கலந்து கேட்டன. எல்லோரும் விழித்தெழுந்து நடுங்கி நின்றார்கள். பரிமளம் தன் ரிவால்வரைச் சரி பார்த்துத் தயாராக வைத்துக் கொண்டு மெள்ள ஒரு ஜன்னலைத் திறந்து பார்த்தாள். நிலவு வெளிச்சத்தில் அவள் கண்ட காட்சி பயங்கரமாக இருந்தது. வெறி கொண்ட சிறுத்தையும் ஒரு மனிதனும் கட்டி விழுந்து புரண்டு கொண்டிருந்தார்கள். அவர்களுக்குச் சிறிது தூரத்தில் ஒரு துப்பாக்கி கிடந்தது. பரிமளத்துக்கு ஒரு கணம் என்ன செய்வது என்று தோன்றவில்லை. அவள் புலியைச் சுட்டால் அந்தக் குண்டு மனிதன் மேலும்




பாயலாம். சட்டென்று அவள் மனதில் ஒரு யோசனை உதித்தது. ஜன்னல் வழியே ரிவால்வரை நீட்டி வெறும் வெளியை நோக்கிச் சுட்டாள். இந்தச் சத்தத்தைக் கேட்டு மிரண்ட சிறுத்தை மனிதனை விட்டு விட்டுச் சத்தம் வந்த பக்கம் ஓடி வந்தது. அடுத்த விநாடி கீழே கிடந்த மனிதன் தன் துப்பாக்கியை எடுத்துச் சிறுத்தையைச் சுட்டான். ஒரே குண்டில் கீழே விழுந்தது சிறுத்தை! பரிமளம் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். சிறுத்தை விழுந்த இடத்தை அடைந்தாள். உடனே அவள் முகத்திற்கு நேராக 'டார்ச் லைட்'டின் வெளிச்சம் வீசப்பட்டது.

"அட!" என்றான் சிறுத்தை வீரன்.

"ஓ! நீங்களா?" என்றாள் பரிமளம்.

சட்டென்று பரிமளத்தின் முன்னே வந்து. "இன்று நீங்கள் செய்த உதவிக்கு நான் என்றும் கடமைப் பட்டவன்" என்றான் 'காமிரா மேன்.'

"நீங்கள் எப்படிப் புலியிடம் அகப்பட்டுக் கொண்டீர்கள்?" என்றாள் பரிமளம்.

"நான் ராமபுரம் போலீஸில் சப் இன்ஸ்பெக்டராக இருக்கிறேன். என் பெயர் சந்தோஷம். பல நாட்களாக இந்தச் சிறுத்தையைத் தேடினோம். அகப்படவேயில்லை. இன்று இந்தக் காட்டில் இருப்பதை அறிந்து வந்தோம். எங்களைக் கண்டு அது ஓடவும் நாங்கள் துரத்திக் கொண்டு இங்கு வந்தோம். ஓடிக்கொண்டிருந்த சிறுத்தை திடீரென்று திரும்பி என்மேல் பாய்ந்தது. எதிர்பாராத தாக்குதலால் கையிலிருந்த துப்பாக்கி நழுவிக் கீழே விழுந்து விட்டது. அதை எடுப்பதற்கு முடியாததால் நான் ஆயுதமின்றி அதை எதிர்க்க வேண்டி வந்தது. என்னுடன் வந்த ஜவான்கள் ஓட்டம் பிடித்து விட்டார்கள். இன்று என் உயிர் உங்களால் காப்பாற்றப் பட்டது!" என்றான்.

"உங்கள் ஜவான்கள் சிறுத்தைக்குப் பயந்து இங்கு எங்கேயாவது ஒளிந்து கொண்டிருப்பார்கள். விசிலை ஊதி அவர்களை வரவழையுங்கள்!" என்றாள் பரிமளம் சிரித்துக்கொண்டே.

★

அடுத்த நாள் காலை ராமபுரம் முழுவதும் சிறுத்தையின் பேச்சாகவே இருந்தது. பிறகு ஒரு நாள் தினசரிப் பத்திரிகையைப் பிரித்த பரிமளத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. "சப்-இன்ஸ்பெக்டரின் உயிரைக் காப்பாற்றிய வீரப்

பார்க்கவில்லை. வேறு எதையோ கவனித்துக் கொண்டிருந்தான். பரிமளத்துக்குத் தான் எந்த வழியாக வந்தோம் என்று தெரியவில்லை. சற்று நேரம் இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தாள்.

கால் மணி நேரத்திற்குப் பிறகு மரத்திலிருந்து இறங்கிய அந்த வாலிபன், பரிமளத்தைத் திரும்பிப் பார்க்காமலேயே நடந்தான். அவளும் தன் ஸைக்கிளை மெள்ளத் தள்ளிக்கொண்டு அவனைப் பின் தொடர்ந்தாள். சற்றுத் தூரம் போனதும் மேலே போகாமல் அங்கிருந்த பாறைமேல் வேண்டுமென்றே உட்கார்ந்து கொண்டான் அந்த வாலிபன்.

பரிமளத்தின் நிலைமை சங்கடமாகி விட்டது. மெள்ள நடந்து அவனுக்கு எதிரில் வந்து, "ஸார், ராமபுரம் போகும் வழி எது?" என்று வினயமாகக் கேட்டாள்.

அப்போதுதான் அவளைப் பார்த்தது போல், "வாருங்கள், காண்பிக்கிறேன்!" என்று எழுந்தான் அவன்.

சிறிது தூரம் இருவரும் மௌனமாகவே நடந்தார்கள். பரிமளத்துக்குத் தான் ஓர் ஆண்பிள்ளையுடன் அந்தக் காட்டில் தனிமையில் இருப்பது சற்றுப் பயமாக இருந்தாலும், அவனுடைய நடை உடை பாவனையைப் பார்த்துச் சற்றுத் தைரியம் அடைந்தாள்.

"நீங்கள் ராமபுரத்தில் எங்கே இருக்கிறீர்கள்?" என்று கேட்டான் அந்த வாலிபன்.

"பெண்கள் பாடசாலையில் எட்டாம் வகுப்பு உபாத்தியாயினியாக வந்திருக்கிறேன்" என்றாள் பரிமளம்.

"இன்றுதான் இந்தக் காட்டிற்கு வந்தீர்களா?"

"இந்த ஊருக்கே இன்றுதானே வந்தேன்!"

"அப்போதே நினைத்தேன்; ஊருக்குப் புதிதாக இருப்பதால்தான் இவ்வளவு தைரியமாக நீங்கள் காட்டுப் பக்கம் வந்திருக்கிறீர்கள்!"

"ஏன், இங்கு பயப்படும்படி என்ன இருக்கிறது?"

"சில தினங்களாக ஒரு சிறுத்தை இந்தச் சுற்றுப் புறங்களுக்கு வந்து கலாட்டா செய்கிறது. அதனால்தான் சொன்னேன்."

"அதைச் சுடுவதற்கு யாருமே முயற்சிக்க வில்லையா?"

"இவ்வூர் போலீஸ் முயற்சி செய்து வருகிறது. ஆனால் அந்தச் சிறுத்தை ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு இடமாகச் சுற்றி வருவதால் இதுவரை அகப்படவில்லை" என்று சொல்லும் போதே அவன் முகத்தில் அலட்சியத்தோடு சிறிது கவலையும் தோன்றியது.

"என் தந்தை காட்டிலாக்காவிலே வேலையாக இருந்தார். அப்போது எத்தனையோ சிறுத்தைகளைக் கொன்றிருக்கிறார். எனக்குக்கூட ஒரு 'ரிவால்வர்' வாங்கிக் கொடுத்திருக்கிறார்" என்றாள் பரிமளா.

"இப்போது உங்கள் தகப்பனார் எங்கே இருக்கிறார்?"

"காலமாகி விட்டார்......"

பரிமளாவின் குரல் கம்மியது.

"உங்களுடைய சொந்த ஊர் எது?"

"சென்னையில் இருக்கும் என் ஒரே ஒரு சகோதரனைத் தவிர வேறு சொந்த மனிதரோ, சொந்த ஊரோ கிடையாது."

"அடாடா! ஏதேதோ கேள்விகள் கேட்டு உங்களுக்கு வருத்தமுண்டாக்கி விட்டேன். இதோ, ஊருக்குள் வந்து விட்டோம். இனி உங்களுக்கு என் உதவி தேவையிருக்காது. நான் சென்று வரட்டுமா?" என்று சொல்லிவிட்டு வேறு வழியாகச் சென்றுவிட்டான் அந்த வாலிபன்.

"என்ன முட்டாள்தனம்! அவர் யார் என்றே கேட்காமல் போய்விட்டோமே!" என்று எண்ணியபடியே மெள்ள நடந்து தன் விடுதியை அடைந்தாள் பரிமளம்.

★

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவள் எங்கும் அதிகமாகப் போவதில்லை. மற்ற உபாத்தியாயினிகளின் சிரிப்பும் அட்டகாசமும் அவளுக்கு அளவற்ற வெறுப்பை யளித்தன. ஆனால் அடிக்கடி அவளுக்கு






**ப**ரிமளம் அன்றுதான் ராமபுரம் பெண்கள் பாடசாலையின் தலைமை உபாத்தியாயினி ஆனாள். ராமபுரத்தை 'பெரிய கிராமம்' என்றுதான் சொல்லமுடியும். பரிமளத்துக்குப் பாடசாலை காம்பவுண்டின் உள்ளேயே இருக்கும் ஒரு கட்டிடத்தில் ஓர் அறை விடப்பட்டிருந்தது. அதில் நிரம்பி யிருந்த அவளுடைய சாமான்களைக் கண்ட மற்ற உபாத்தியாயினிகள் தமக்குள் ரகசியம் பேசிக் கொண்டார்கள். பரிமளத்தின் அறையில் ஒரு லேடீஸ் சைக்கிள், கிராமபோன், தையல் மெஷின், காமிரா, ரிவால்வர் இத்யாதி பொருட்கள் நிரம்பி யிருந்தன. பதினெட்டு வயது நிரம்பாத பரிமளத்தின் சிவந்த கொடி போன்ற தேகமும், அழகிய முகமும், சுருண்டு நீண்ட கருங்கூந்தலும் காண்போரைக் கவர்ந்தன. தன்னைக் கண்டு பொறாமை கொண்ட மற்ற உபாத்தியாயினிகள், தன்னிடம் அதிகமாக நெருங்காததைக் கண்டு பரிமளம் வருத்த மடைந்தாள்.

அன்று மாலை பள்ளிக்கூடம் விட்டதும் தனிமையில் உட்கார்ந்திருந்தாள், பரிமளம். மற்ற உபாத்தியாயினிகள் தோட்டத்தில் அரட்டை அடித்துக் கொண்டிருந்ததைக் கண்ட அவள் காமிராவைத் தோளில் மாட்டிக்கொண்டு தன் சைக்கிளில் ஏறி மெள்ள விட்டுக்கொண்டே சென்றாள்.

ராமபுரம் ஸ்திரீகள் சைக்கிள் விடுவது புதுமையான விஷயமாதலால் எல்லோரும் அவளை உற்றுப் பார்க்கலானார்கள். சங்கடமடைந்த பரிமளம் மனம் போன வழியில் சைக்கிளை வேகமாக விட்டுக் கொண்டு சென்றாள். சிறிது நேரத்தில் ஊருக்கு வெளியில் இருந்த சிறு காட்டை அடைந்தாள்.

அழகிய இயற்கைக் காட்சிகளைக் கண்ட பரிமளத்துக்கு உற்சாகம் பிறந்தது. சைக்கிளை ஒரு ஆலமரத்தடியில் நிறுத்தி விட்டுப் புகைப்படம் எடுக்கத் தொடங்கினாள். சில படங்கள் எடுத்தானதும் தன் இடது மணிக்கட்டைத் திருப்பிக் கடிகாரத்தைப் பார்த்தாள். மணி ஐந்து நாற்பத்தைந்து. வீடு திரும்ப நினைத்து ஆலமரத்தடிக்கு வந்தாள். எதிரேயிருந்த கள்ளிச்செடியில் ஓர் அழகிய பஞ்சவர்ணக் கிளி உட்கார்ந்திருந்தது. அதைக் கண்டதும் காமிராவைக் கையில் எடுத்தாள். 'க்ளிக்' என்ற சத்தம்—கிளியைப் படம் எடுத்துவிட்டாள். அதே சமயத்தில் 'க்ளிக்' என்று இன்னொரு சத்தம் கேட்டது. திடுக்கிட்டுச் சுற்றிலும் பார்த்தாள். யாரையும் காணோம். அதிசயமடைந்த அவள் ஆலமரத்தை நோக்கினாள். அதில் கண்ட காட்சி அவளைப் பிரமிக்க வைத்தது. மூன்று பிரிவாகப் போகும் ஒரு கிளையின் மேல் சோபாவில் சாய்வதுபோல, உல்லாசமாகச் சாய்ந்து கொண்டிருந்தான், ஒரு வாலிபன். அவன் கையிலும் காமிரா இருந்தது.

பரிமளத்துக்குச் சந்தேகம் தோன்றியது. சற்று நேரத்திற்கு முன் அவன் பிடித்த படம் தன்னுடையதுதானோ? ஆனால் அவன் அவளைத் திரும்பிக்கூடப்

# ஆச்சரியமாகத் தோன்றலாம்

ஆனாலும்

**உண்மைதான் — ஊர்ஜிதமானதும் கூட !**

●

பலவித பொருள்கள் அடங்கிய

## நீபா ஹேர் ஆயிலின்

ஆறு துளிகள் அற்புதமாக
நரம்புகளுக்கு இதமளிக்கின்றன

●

**கங்கா ஒர்க்ஸ்,** அடையாறு, சென்னை-20

---

உரோமத்தை உதிர்த்து

## உருவைக் குலைக்கும் சரும வியாதிகளை

**உலகப் புகழ் பெற்ற ஜாம்பக் சொஸ்தமாக்கும்**



உரோமம் உதிர்ந்து உருக்குலைக்கும் சரும வியாதிகளால் அவதியுறுவானேன்? சரிவர ஜாம்பக் உபயோகித்து வந்தால் அந்த ரோகங்களைப் போக்கி உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. ஜாம்பக்கிலுள்ள அபூர்வமான மூலிகை மருந்து சத்துக்கள் சருமத்தின் ஊடே சென்று விடுகின்றன. அதனால்தான், ஜாம்பக் வெகு விரைவில் - நமைச்சல் வேக்காடுகளை ஆற்றி, சருமத்திலேற்படும் கசிவைத் தடுத்து வியாதிக் கிருமிகளைக் கொன்று, புண்பட்ட சருமத்தைப் பண்படுத்துகிறது. மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்.




எப்போதும் உபயோகியுங்கள் **Zam-Buk**

NO. 4.

ஆறுதலளித்து குணமாக்கும் கிருமி நாசனக் களிம்பு

## ஒரு புதிய பிரச்னை

இலங்கையரல்லாதவர்களைப் பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களாக நியமிப்பதென்றால் ஒவ்வொரு தடவையும் கல்வி இலாகாவுக்கு எழுதி அனுமதி பெறவேண்டுமென்ற ஒரு விதி இருக்கிறது. அதோடு அந்தப் பதவிக்குத் தகுதியான இலங்கையர்கள் கிடைக்கவில்லையென்பதையும் தகுந்த அத்தாட்சிகளுடன் நிரூபிக்கவேண்டியிருக்கிறது. ஆசிரியத் தொழிலை மேற்கொள்ள இலங்கையர் விரும்பவில்லையென்று சர்வ கலாசாலை உதவி அத்யட்சகர் ஸர் ஐவர் ஜென்னிங்ஸ் தெளிவாக அறிவித்திருக்கிறார் என்றும், அப்படியிருந்தும் இலங்கையரல்லாத ஆசிரியர்களை நியமிப்பதில் அனாவசியமான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தி யிருப்பதினால்தான் ஆசிரியர்களுக்குக் கடுமையான தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளதென்றும் நீர்க்கொழும்பு செண்ட்மேரீஸ் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ எஸ். வீ. ஜ. சோமநாதர் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார். இந்தியாவிலிருந்து தாராளமாக வந்து போய்க்கொண்டிருந்த காலத்தில் தட்டுப்பாடு என்ற பேச்சே இல்லாமலிருந்தது. இலவசக் கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்து மாணவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்த பின் இலங்கையரல்லாத ஆசிரியர்களின் நியமனத்தைக் கட்டுப்படுத்தியிருப்பது மிகவும் சிக்கலான ஒரு புதிய பிரச்னையை உருவாக்கியுள்ளது.

## ராம நவமி விழா

கொழும்பு ஸ்ரீ ராமகான சபையார் இவ்வாரம் ராம நவமி உற்சவத்தை இரண்டு நாள் சிறப்பாகக் கொண்டாடினார்கள். முதல் நாள் பஜனை, தீபப் பிரதட்சிணம் முதலியன நடந்தன. இரண்டாம் நாள் விசேஷ பூஜைகள், சமாராதனை, ஸ்ரீமதி ராஜலட்சுமி ஸ்ரீனிவாஸன், ஸ்ரீ மணி பாகவதர் கச்சேரிகள் முதலியவை நடந்தன. இரண்டாம் நாள் வைபவத்துக்கு இந்திய ஹை கமிஷனரின் காரியதரிசி ஸ்ரீ என். இ. எஸ். ராகவாச்சாரியும் விஜயம் செய்திருந்தார்.

## தமிழுக்கு மதிப்பு

தமிழையும் சிங்களத்தையும் கூடிய சீக்கிரத்தில் தேசிய பாஷைகளாக்குவதற்கு உதவிபுரிய தேசிய பாஷை இலாகா ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா தலைமையில் நேற்று நடந்த சர்க்கார் பார்லிமெண்டரிக் கட்சி தீர்மானித்திருக்கிறது. ஆங்கிலம் சர்வதேச பாஷையாயிருப்பதினால் இரண்டாம் பாடமாக அதைப் பள்ளிக்கூடங்களில் வைக்கவேண்டுமென்றும், தேசிய பாஷைகளில் போதிய பாடப் புத்தகங்கள் இல்லாதபடியினால் காலக்கிரமத்திலேயே தேசிய பாஷைகளை ராஜாங்க பாஷையாக்க வேண்டுமென்றும், இதற்கிடையில் கோர்ட்டுகளிலே சாத்தியமான வரையில் தேசிய பாஷைகளிலேயே விசாரணைகளை நடத்த வேண்டுமென்றும் பார்லிமெண்டரிக் கூட்டம் தீர்மானித்தது.

### அட்டைப்பட விளக்கம்

ஈடு இணையில்லாத ஒரு பேரழகியைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டுவரும்படியாக ஓர் அரசன் தன் மந்திரியிடம் கூறுகிறான். மந்திரி எவ்வளவோ சிரமப்பட்டு அத்தகைய பேரழகி ஒருத்தியைக் கண்டு பிடிக்கிறான். ஆனால், என்ன ஏமாற்றம்!—அவள் அரசனைக் கல்யாணம் செய்துகொள்ள மறுக்கிறாள். "மந்திரியின் புதல்வனையே கல்யாணம் செய்துகொள்ளுவேன்" என்று கூறுகிறாள். மந்திரி இதைத் தடுக்க முயற்சி செய்து பார்க்கிறான். முடியவில்லை. கடைசியில், அவ்விருவருக்கும் திருமணம் நடக்கிறது. அரசனுக்கு இந்தச் செய்தி எட்டுகிறது. உடனே அவ்விருவரையும் கைது செய்துகொண்டு வரும்படியாக அவன் உத்தரவிடுகிறான். சேவகர்கள் போகிறார்கள். ஆனால் மந்திரி குமாரனையும் பேரழகியையும் அங்கே காணோம். அவர்கள் எங்கே?—வியப்பும் திகைப்பும் மிக்க இந்தக் கதை, உலக இலக்கியங்களில் ஒன்றாகக் கருதப்படும் அரபிக் கதைகளில் ஒன்றாகும். அரபிக் கதைகள் சிருஷ்டி செய்யும் மந்திர ஜாலம் மிக்க ஒரு தனி உலகத்தைப்போல, இவ்விதழ் அட்டைப்படமும் பல்வேறு வர்ண ஜாலங்களுடன் கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய முறையில் எவ்வளவு சிறப்பாக அமைந்திருக்கிறது!

நமது இலங்கைக் கடிதம்

# தமிழ் ராஜாங்க பாஷையாகும்

ரஜனி

கொழும்பு எப். 5—

ஏப்ரல் 22-ம் தேதி நடக்கப் போகும் இந்திய காங்கிரஸின் பத்தாவது வருடாந்தர மகாநாட்டில் பிரஜா உரிமைச் சட்டத்தைப் பற்றி காங்கிரஸ் எவ்விதத் தீர்மானம் செய்ய வேண்டுமென்பதைப் பொதுஜன அபிப்பிராயம் படிப்படியாக உருவாக்கி வருவதாய்ச் சொல்லலாம். இலங்கையிலேயே பிறந்த இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை சுலபமாகக் கிடைக்கக்கூடிய முறையில் சட்டத்தைத் திருத்த உத்தேசித்திருப்பதாகப் பிரதமர் சேனநாயகா கூறிய விபரங்கள் இலங்கைக் கடிதத்தில் ஏற்கெனவே பிரசுரமாகியுள்ளன. பண்டித நேருவின் இலங்கை விஜயத்தினால் திருப்திகரமான சூழ்நிலை ஏற்பட்டுள்ளதென்றும், இதன் காரணமாக இந்திய காங்கிரஸ் தனது பழைய தீர்மானத்தைப் புனராலோசனை செய்து பிரஜா உரிமைச் சட்ட பகிஷ்காரத்தை வாபஸ் பெறவேண்டுமென்றும் இலங்கையிலுள்ள இந்திய வர்த்தகச் சங்கங்களைச் சேர்ந்த பிரதிநிதிகளின் கூட்டமொன்று ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. இந்த தீர்மானத்தில் பிரதமர் சேனநாயகா தமது உத்தேசத்திலிருக்கும் திருத்த மசோதாவை விரைவில் கொண்டுவர வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இலங்கை இந்திய காங்கிரஸ் இந்தியப் பிரதிநிதிகளடங்கிய பூரண ஜனநாயக ஸ்தாபனமாகையினால், பிரபல இந்தியப் பிரதிநிதிகள் கூடிச் செய்த தீர்மானத்தை காங்கிரஸ் அலட்சியம் செய்வதற்கில்லையென்றும் அடுத்து வரும் மாதத்தில் மகாநாட்டில் பகிஷ்காரத் தீர்மானம் வாபஸ் வாங்கப்படலாம் என்றும் தெரிகிறது.

## அற்ப சந்தோஷமாக முடிந்தது

சிலோன் ரேடியோவில் ஆக்டிங் கண்ட்ரோலராக ஸ்ரீ எஸ். சிவபாத சுந்திரம் மார்ச் முதல் தேதி நியமிக்கப்பட்டபொழுது இந்த உயர் பதவிக்கு ஒரு தமிழர் நியமிக்கப்பட்டதில் தமிழ்ச் சமூகம் பெருமையும் மகிழ்ச்சியுமடைந்தது. ஆனால் இது அற்ப சந்தோஷமாக முடிந்துவிட்டது. முன்னர் ரேடியோ சிலோன் செய்தி ஆசிரியராயிருந்த ஸ்ரீ டி. இ. வீரக்கூன் என்ற சிங்களவர் நேற்று புரோகிராம் கண்ட்ரோலர் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கிறார். அவர் நாலு மாத உபகாரச் சம்பளத்தில் சீமைக்குப் போய் பி. பி. ஸி.யில் பயிற்சி பெற்று ஏப்ரல் 3-ம் தேதி இலங்கைக்குத் திரும்பினார். 4-ம் தேதி புரோகிராம் கண்ட்ரோலர் பதவியை ஸ்ரீ சிவபாத சுந்திரத்தினிடமிருந்து ஸ்ரீ வீரக்கூன் பெற்றுக் கொண்டிருக்கிறார். ஸ்ரீ சிவபாத சுந்திரம் சீமையில் இரண்டு வருடங்களுக்கதிகமாக பி. பி. ஸி. யில் சேவை புரிந்து டெலிவிஷன் உள்பட ஒலிபரப்பு நுட்பங்களில் சிறந்த பயிற்சி பெற்றுத் திரும்பி வந்துள்ளார். அப்படியிருந்தும் புரோகிராம் கண்ட்ரோலராக ஸ்ரீ வீரக்கூனை நியமித்திருப்பதற்குக் காரணம் என்ன என்பது பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கும் கடவுளுக்கும்தான் தெரியும். ரேடியோ மந்திரி பதவியை வகிப்பவர் ஒரு தமிழர் என்பதும் இங்கு குறிப்பிட வேண்டியதாகும்.

## ஜோஸ்யத்துக்கு லைசென்ஸ்

இலங்கை அரசாங்கத்தினிடம் லைசென்ஸ் வாங்காமல் யாரும் ஜோஸ்யம் சொல்லக் கூடாதென்று ஒரு சட்டம் கூடிய சீக்கிரம் அமுலுக்கு வரப்போகிறது. போலி ஜோஸ்யர்கள் பொது ஜனங்களை ஏமாற்றாதபடி தடை செய்வதுதான் இந்தச் சட்டத்தின் நோக்கமாம். சோதிடக் கலையில் பயிற்சியளிக்க இலங்கையில் ஏற்கெனவே மூன்று கழகங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றுக்குப் பிரதம மந்திரி சேனநாயகா தலைவர். இந்தக் கழகங்களிலொன்றில் மூன்று வருடகாலம் பயிற்சி பெற்றுப் பரீட்சையில் தேறுபவர்களுக்கே சோதிடம் சொல்ல லைசென்ஸ் கொடுப்பதென்றும் லைசென்ஸ் இல்லாமல் யாரும் சோதிடம் சொல்லக்கூடாதென்று தடை செய்வதென்றும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இலங்கையில் தெருவுக்குத் தெரு இந்திய சோதிடர்கள் சந்திகளில் உட்கார்ந்து எளிய ஜனங்களுக்குச் சோதிடம் கூறுவது சர்வ சகஜமானது. மேற்படி சட்டம் அமுலுக்கு வந்துவிட்டால் இந்த சோதிடர்கள் கடையைக் கட்டவேண்டியதுதான்.

"கணக்குப் பிள்ளை ஐயாவை வரச்சொல்லு!" என்று கூறிவிட்டு, மீண்டும் பாலசுந்தரத்துடன் பேச ஆரம்பித்தார். சிறிது நேரத்துக்குப் பிறகு பழனிவேலு தம் கடையை விட்டுப் போனதும் பாலசுந்தரத்துக்கு வயிறு வெடிக்கச் சிரிக்கவேண்டும்போல் இருந்தது. ஆஹா! எவ்வளவு ஆதாயமான வியாபாரம்! அதிலும் அவருடைய எதிரி பழனிவேலுவினுடைய பைத்தியக்காரத் தனத்தால்!

* * *

மருதை சாப்பிடப் போனான். கடையில் வேறு யாரும் இல்லை. பசி எடுத்தால் தானே பாலசுந்தரம் சாப்பிடப் போவார்?

வியாபார விஷயமாய்த் தீவிர யோசனையில் ஈடுபட்டிருந்த பாலசுந்தரம் 'தடதட' வென்ற சத்தத்தைக் கேட்டு விழித்துக் கொண்டார். அவருடைய மண்டிக்குள் அந்த ஊர் ஸப்-இன்ஸ்பெக்டர் போலீஸ் ஜவான்களோடு நுழைந்தார்.

"மிஸ்டர் பாலசுந்தரம், உங்கள் கடையைச் சோதனை போட வேண்டும். உங்களிடம் கள்ள நோட்டு அச்சடிக்கும் யந்திரம் இருக்கிறதாகப் புகார் வந்திருக்கிறது. இதோ பாரும்!" என்று ஒரு மொட்டைக் கடிதாசியைக் காண்பித்தார்.

பாலசுந்தரத்துக்குத் தலையைச் சுற்றியது. எதிரிலிருந்த மாப் பெட்டிக்குள் பத்திரமாக அந்த இயந்திரங்கள் இருப்பதை அவர் எப்படி அறிவார்?

போலீஸார் அந்தப் பெட்டியைத் திறந்து, கள்ள நோட்டுகள் அச்சடிக்கும் இயந்திரங்களைக் கைப்பற்றினர். பதட்டத்தில் பாலசுந்தரம், "அந்தப் பெட்டியைப் பழனிவேலு தான் கொண்டு வந்து வைத்தார்!" என்று கூறிவிட்டார்.

உடனே பழனிவேலு கடையும் சோதனைக் குள்ளாகியது. அங்கே புத்தம் புது நோட்டுகளாகக் கள்ள நோட்டுகள் அகப்பட்டன. மிளகை மாரிசாமியிடம் அனுப்பி விட்டு 'கமிஷன்' உள்பட அப்போதுதான் அந்த நோட்டுக்களோடு பழனிவேலு கடைக்குத் திரும்பி யிருந்தார்.

பாலசுந்தரத்துக்கு ஆத்திரம், பழனிவேலு ஏமாற்றிவிட்டானே என்று. பழனிவேலுக்கு ஆத்திரம், மாரிசாமி ஏமாற்றி விட்டானே என்று. கடைசியில் ஆளுக்குப் பத்தாயிரம் ரூபாய் அபராதம் செலுத்தினார்கள். கள்ள நோட்டுக்களும் இயந்திரமும் கிடைத்தாலும் அவர்கள்தான் அச்சடிக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க ருசு இல்லாததால் சிறைவாசம் கிடைக்காமற் போயிற்று.

அதுமட்டுமா? அன்று மாலை செய்தித் தாளைப் புரட்டிய பாலசுந்தரத்தின் கண்களில் கீழ்க்கண்ட செய்தி வேறு தென்பட்டது.

"மிளகின் விலை பத்து மடங்கு உயர்ந்து விட்டது!"

பாவம், பாலசுந்தரம் கோர்ட்டில் அநியாயமாகப் பத்தாயிரம் ரூபாய் அபராதம் செலுத்தியபோதுகூட அவ்வளவு வருத்தப்படவில்லை. இப்படி வியாபாரத்தில் மோசம் போனோமே என்ற வருத்தம்தான் அவருக்கு அதிகமாயிருந்தது!

பாலசுந்தரம் தடுமாறியபடி நடந்தார். அவருக்குக் கண் பார்வை மிகவும் மோசமாகி விட்டது. கண்ணாடியைக் கடையிலேயே மறந்து வைத்து விட்டார். மேலும், இரவிலே கண்ணாடி இல்லாமல் என்ன ஜோலி நடக்கப் போகிறது?

பழனிவேலு எதிரே வந்தார். "நமஸ்காரம், ஸார்!" என்று கைகூப்பினார்.

"என்ன பழனிவேலு, சௌக்கியமா? இருட்டில் கண் தெரியவில்லை. வியாபாரமெல்லாம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார் பாலசுந்தரம். கண் தெரியா விட்டாலும் பாம்புச் செவி எங்கே போயிற்று?

"ஏதோ நடக்குது! காலம் கெட்டுப் போச்சில்லே; எதிலும் வித்து மொதலு காணறதுக்குள்ளே நாவு நீக்கு போவுது!" என்றார் பழனிவேலு.

"ஆமா, ஆமா! காலம் கெட்டுப் போச்சு! இதைக் கேளு, தம்பி...!" என்று ஆரம்பித்துத் தாம் மிளகில் ஏமாந்ததை விளக்கினார் பாலசுந்தரம்.

அனுதாபத்தோடு அதைக் கேட்டுக் கொண்டு வந்த பழனிவேலு. "மிளகா! அப்படியானா அதை வித்துப் புடறீங்களா?" என்று கேட்டார்.

"ஆமாம், அதுதான் யோசனை!" என்றார் பாலசுந்தரம்.

"காலைக்குக் கடைக்கு வரேன், தகவல் விசாரிச்சுக்கிட்டு!" என்றார் பழனிவேலு.

இருவரும் பிரிந்தனர்.

*　　　　　*　　　　　*

மாரிசாமி செய்யாத வியாபாரமோ, நாகோ கிடையாது. பாலசுந்தரத்தினிடம் மிளகு மூட்டைகள் இருப்பதைக் கேள்விப் பட்ட பழனிவேலு மாரிசாமியிடம் மறுநாள் கூறினார். பிறகு இருவரும் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதன்படி பழனிவேலு விலை பேசி மிளகை வாங்கிவிட வேண்டியது; பாலசுந்தரத்துக்கு உடனடி பணத்தையும் அவரே கொடுத்து விட வேண்டும். மாரிசாமி பழனிவேலுக்குக் 'கமிஷன்' கொடுத்து அந்த மிளகை வாங்கிக் கொழும்புக்கு அனுப்பி விட வேண்டியது!

பழனிவேலு மறுநாள் பாலசுந்தரத்தினிடம் போனார். அவருக்கு உள்ளூற ஆனந்தம், மிளகு விலை போகிறதே என்று! ஆனால் வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் பிகுவாகவே, "வாங்கின விலைக்கே தருகிறேன், நமக்குள் என்ன?" என்றார். ஆனால் பழனிவேலு ஏமாந்தவரா? அதுவும் பாலசுந்தரமே வலுவில் மிளகை விற்றுவிட வேண்டுமென்று வந்தபிறகு!

கடையில் விலையை நிர்ணயித்துக் கணக்கைத் தீர்த்தார் பழனிவேலு. பாலசுந்தரத்துக்கு ஆனந்தம், "பழனிவேலுக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது!" என்று.

அப்போது பழனிவேலின் கடைப் பையன் ஏதோ ஒரு மரப்பெட்டியைத் தூக்கிக் கொண்டு போனான். "அடே, என்னது?" என்று பழனிவேலு கத்தினார். பிறகு, "அதை இங்கே வையடா! கடைக்குப்போய்க்



# பலே ஆசாமி!

ஏ. எஸ். ராகவன்

**பா**லசுந்தரம் கடையிலேயே உட்கார்ந்திருந்தாலும் 'மார்க்கெட்' நிலவரங்களை உடனுக்குடன் அறிந்து கொள்வார். சரக்குகளைத் தகுந்த சமயத்தில் குறைந்த விலைக்கு வாங்கி, சில காலம் அவை இருக்கிற இடமே தெரியாதபடி சேமித்து வைத்து, பிறகு அவருடைய கணக்குப்படி வட்டியே அசலை விட அதிகமாகி விட்டபோது, அவற்றைச் சட சடவென்று சொற்ப லாபத்தில் — அதாவது வாங்கின விலையைப்போல் இரண்டரை பங்குக்கு — விற்று விடுவார். எந்த வியாபாரத்திலும் சோடை போகாமல் இதுவரை அவர் தம் வெற்றிக் கொடியை நாட்டி வந்தார்!

இரண்டு ஊதுவத்திகளைக் கொளுத்தி வைத்து விட்டு அவற்றினின்று எழுந்து சுருளும் புகையைக் கவனித்துக் கொண்டிருந்தார் பாலசுந்தரம். திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவர்போல, எதிரிலிருந்த செய்தித் தாளை எடுத்துப் பிரித்தார். எந்த மசோதா எப்போது, எங்கே நிறைவேறியது, அதைப்பற்றி எத்தனை குறுக்குக் கேள்விகள் கேட்கப்பட்டன, அதன் நன்மை தீமைகள் என்ன — இவற்றைப் பற்றிய வீண் சர்ச்சைகளில் பாலசுந்தரம் இறங்கவே மாட்டார். செய்தித் தாளைப் புரட்டி வியாபார ரகசியங்களைப் பார்த்துக் கொள்வார். தங்கம், வெள்ளியின் விலை 'அரிசி'யின் விலை போல ஏறுவதைக் கண்டு ஆனந்த மடைவார். உடனே பருமனான தம்முடைய கையில் சுருண்டு தட்டையாக இருக்கும் நாலு பவுன் காப்பைப் பார்த்துக் கொள்வார். அதை விற்றாலும் முந்நூறுக்குக் குறையாதே! — அந்த நினைப்பு!

எதிரே மண்டியில் கணக்கில்லாத பிண்ணாக்கு, சர்க்கரை, வெல்ல மூட்டைகள் அடுக்கப்பட்டிருந்தன. அவற்றைப் பற்றிப் பாலசுந்தரத்துக்குக் கவலை இல்லை. நாள் ஆக ஆக லாபம்தான்! ஆனால் அவர் ஏமாந்து போய் ஐம்பது மூட்டை மிளகைச் சேமித்து வைத்து விட்டார். எதிர்பார்த்தபடி விலை உயரவில்லை. (நான் எழுதுவது 1947-ஐப் பற்றி என்பது ஞாபக மிருக்கட்டும்.)

பாலசுந்தரம் தீவிரமான யோசனையில் ஆழ்ந்தார். ஆனால் நின்று நிதானிக்க மண்டியில் அவகாசம் ஏது? வாடிக்கைக்காரர்கள் சாரி சாரியாக வந்தவண்ண மிருந்தனர். வியாபாரம் மும்முரமாக இருந்தது.

"நமஸ்காரம், ஸார்!" என்ற குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்த பாலசுந்தரம், "அடேடே, வாங்க மாரிசாமி!" என்று வந்தவரை வரவேற்றார். கூடவே, "டே பையா, போய்க் காப்பி வாங்கி வா!" என்று உத்தரவும் போட்டார்.

நண்பர்கள் சிறிது நேரம் குசுகுசுவென்று பேசினர். இடையிடையே மாரிசாமி தம் மீசையைத் தடவி விட்டுக் கொண்டார். பாலசுந்தரம் தம் வயிறு நோகச் சிரித்தார்.

பத்திரிகையைப் புரட்டியபடி, "என்னங்க, கள்ள நோட்டு அச்சடிக்கிறாங்களாமே, அது யாரு அவ்வளவு தைரியமா வேலை செய்யறது? நம்ப பக்கத்திலே தானும்!" என்றார் பாலசுந்தரம்.

"உலகம் கெட்டுக் கிடக்குங்க! நமக்கு ஏன் அந்தப் பேச்சு?" என்று கூறியபடியே மாரிசாமி கிளம்பினார்.

அவர் தலை மறைந்ததும் மருதை மெள்ள, "எசமான்!" என்றான்.

பாலசுந்தரம் ஏறிட்டுப் பார்த்தார். மருதை அவருடைய 'நம்பகமான ஆள்.'

"இந்த ஆசாமியைப் பத்தி ஊரிலே நல்ல பேச்சு இல்லீங்க!" என்றான் மருதை.

"அது எனக்குத் தெரியாதா, மருதை! இதோ பாரு, நம்ப பழனிவேலின் விவகாரமெல்லாம் மாரிசாமிக்கு அத்துபடி; அதுலேதான் அவனுடன் இத்தனைநேரம் பேசிக் கொண்டிருந்தேன்" என்றார் பாலசுந்தரம்.

பழனிவேலும் ஒரு மண்டிக் கடைக்காரர்தான். பாலசுந்தரத்துக்கும் இவருக்கும் எதிலும் போட்டி. பழனிவேலு பாலசுந்தரத்தைவிட வயதில் குறைந்தவரானாலும், மற்ற விஷயங்களில் 'அண்ணன்.' எதிலும் மூன்று பங்கு லாபம் எதிர்பார்ப்பார். லாபத்தில் குறைந்தால், கைப்பொருளை இழந்தது போலக் கண் கலங்குவார். ஆனால் அதிர்ஷ்டம் பாலசுந்தரத்தின் பக்கமே இருந்ததால், பழனிவேலுக்கு அவர்மீது எப்போதும் 'ஒரு கண்' உண்டு. அதற்காக அவரும் மாரிசாமியின் மூலமே உளவு அறிந்து வந்தார். இருவருக்கிடையேயும் மாரிசாமி 'நாரத'ராக விளங்கி வந்தார்.

• • •

**வி**யாபாரம் முடிந்ததும் கணக்குகளையெல்லாம் முடித்துவிட்டு அவசரமாக வீட்டுக்குக் கிளம்பினார் பாலசுந்தரம்.

என்று கூறுகின்றனர். இது எப்படிப் பொருந்தும்? ஆங்கிலக் கேள்வித் தாள்களில் அம்மாதிரி யிருந்தால் எங்களுக்கு அது எப்படித் தெரியும்?

இம்மாதிரியான கணக்குகளைக் கொடுக்கும் அறிவாளிகள் மொழி பெயர்ப்பதில் ஜாக்கிரதையாக இருக்கக் கூடாதா? இந்தக் கஷ்டங்களைப் பார்க்கும்போது, தாங்கள் "பரீட்சையே வேண்டாம்" என்று சொல்வதே சரியானது.

எட்டறை
6—4—50 எம். சந்தானம்

○●○

தாங்கள் பத்திரிகையில் சென்ற வாரம் எஸ். எஸ். எல். ஸி. கேள்வித் தாள்களைப் பற்றி எழுதியது மிகவும் பொருத்தமாக இருந்தது. அதை விடப் பன்மடங்கு கொடுமையானது ஈ. எஸ். எல். ஸி. பரீட்சைத் தாள்கள். எல்லாவற்றையும் கவனிக்கும்போது வேண்டுமென்றே இம்முறை கையாளப்படுவதாகத் தெரிகிறது. ஈ. எஸ். எல். ஸி. பரீட்சை எழுதுவோர் அநேகமாகக் குழந்தைகள் என்றே சொல்ல வேண்டும். பலர் 12 அல்லது 13 வயதுக் குட்பட்டவர்கள். கணக்குப் பரீட்சையில் கொடுத்திருக்கும் ஒரு கேள்வியை அப்படியே கொடுக்கிறேன்.

"ஒரு வரிசையில் 10 மரங்கள் இருக்கின்றன. அவைகளில் 160 பழங்கள் இருக்கின்றன. முதல் 6 மரங்களில் சராசரி 19 பழங்கள் விதம் இருக்கின்றன. கடைசி 5 மரங்களில் சராசரி 14 பழங்கள். வரிசையின் முதலிலிருந்து இருக்கும் பழங்கள் 6-வது மரத்தில் எவ்வளவு பழங்கள் இருக்கின்றன என்பதைக் கண்டுபிடி?"

மேற்படி கணக்கில் கீழ் கோடிட்டிருக்கும் வரிக்கு என்ன பொருள் என்பது புரிந்து கொள்ள முடியவில்லை. கணக்கை ஒழுங்காகப் போட்டவர்களும், இந்தப் பாஷைக் கோளாறினால் தவறு செய்திருக்கிறார்கள்.

டி. ஆர். குருசாமி பி.ஏ.
(நிர்வாகி, சுப்பையா நினைவு உயர்தர ஆரம்பப் பாடசாலை)
தென்னூர், திருச்சி
5—4—50

○●○

இவ்வருட ஈ. எஸ். எல். ஸி. எட்டாம் வகுப்பு கணக்குப் பரீட்சை வினாக்களை மொழி பெயர்த்த மகானுபாவர், சிறுவர்கள் கேள்விகளை விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் மொழி பெயர்த்தாரோ அல்லது சிறுவர்கள் விளங்காமல் திண்டாடட்டும் என்று மொழி பெயர்த்தாரோ தெரியவில்லை. ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்தபோது சில வார்த்தைகளையே விட்டு விட்டார்கள். அதனால் கணக்கின் போக்கே மாறி சிறுவர், சிறுமியர்களுக்கு மிக்க குழப்பம் ஏற்பட்டு விட்டது. உதாரணமாகக் கீழே கொடுத்திருக்கும் கணக்கையும் அதன் மொழி பெயர்ப்பையும் கவனிக்கவும்.

A man bought mangoes at Rs. 15 per thousand. He transported them at a cost of Rs. 2-8-0 per thousand. If 16 percent of the mangoes became rotten in transit, how should he sell the remaining mangoes per hundred to make a profit of 20 percent.

இந்தக் கணக்குக்குத் தமிழ் பரீட்சைத் தாளில்கொடுத்திருந்த மொழிபெயர்ப்பு:- "ஒருவன் 1,000 மாம்பழங்கள் ரூ. 15 விதம் வாங்கினான். 1,000 ரூ. 2-8-0 விதம் வெளியூருக்கு அனுப்பினான். அனுப்பினதில் 16% அழுகிப்போயின. 20% லாபமடைய மீதிப் பழங்களை நூறு என்ன விலைக்கு விற்க வேண்டும்?"

இதில் at a cost of என்பதற்கு மொழி பெயர்ப்பே இல்லாததால் பிள்ளைகள் ரூ. 2-8-0 ஐ விற்ற விலையாகக் கொண்டு கணக்கு செய்திருக்கிறார்கள். சில பிள்ளைகள் "எவனும் 1000 பழங்கள் ரூ. 15-க்கு வாங்கி ரூ. 2-8-0க்கு விற்க மாட்டான். ஆதலால் கணக்கு தப்பு" என்று எழுதி யிருக்கிறார்களாம்.

முதலில் தமிழில் கணக்கு வினாத் தாளைப் பார்த்த ஆசிரியர்களே விளங்காமல் விழித்தார்களென்றால் இது அபத்த மொழிபெயர்ப்பு என்பதற்கு வேறு சான்று வேண்டுமோ?

இப் பரீட்சைக்குக் கொடுத்திருக்கும் சராசரி கணக்கை எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களே போட முடியாமல் விழிக்கிறார்கள். அதோடு கேள்வித்தாளின் மொழி பெயர்ப்பும் மிக்க மோசம்.

பரீட்சை ஹாலில் தலைமைப் பார்வையாளர்களாவது ஆங்கில வினாத் தாள்களைப் பார்த்து, விடுபட்ட வார்த்தைகளைச் சொன்னால் என்ன குடிமுழுகிப் போகுமோ? அவர்கள் வாயையே திறக்கக் கூடாது என்கிறார்கள்.

கணக்குப் பரீட்சை எழுதிவிட்டு வெளியில் வந்த மனமுடைந்த சிறுவர் சிறுமியர்களைக் கண்டால் யார் மனம்தான் உருகாது? வாய் இருந்தால் பரீட்சை ஹாலின் தூண்கள், வாசற் கதவுகள், சுவர்கள் இவைகளும் புலம்பியிருக்கும்.

இனியாவது பொதுஜன சர்க்கார் குறைந்தது மொழி பெயர்ப்பிலாவது போதிய கவனம் செலுத்தி, குழந்தைகளின் துக்கத்தைப் போக்குவார்களா?

உமராபாத்
7—4—50 டி. அருணாசலம்

# ஈ. எஸ். எல். ஸி. பரீட்சை

நீங்கள் 2-4-50 'கல்கி' இதழில் 'பாதகர்களுக்கு என்ன தண்டனை?' என்று எழுதப்பட்டிருந்த தலையங்கத்தைக் கண்டேன். அதைவிட மிகவும் திடுக்கிடும் விஷயம் இம்மாதம் 4, 5, தேதிகளில் நடந்த ஈ. எஸ். எல். ஸி. பரீட்சையில் நடந்திருக்கும் பாதகம்தான்.

1. மேற்படி பரீட்சையில் பூகோளப் பகுதியில் கீழ்க்கண்டவாறு இரண்டு கேள்விகள் உள்ளன: "(a) மண்ணெண்ணெய், பருத்தி இந்தியாவில் இறக்குமதி செய்கின்ற இரண்டு நாடுகளை எழுது. (b) சாக்குப் பைகள், எண்ணெய் வித்துக்கள் இந்தியா ஏற்றுமதி செய்யும் இரண்டு நாடுகளை எழுது." இக் கேள்விகளுக்கு ஏதேனும் அர்த்தம் உண்டா? இப்படி அர்த்தம் புரியாமல் கேள்வி கேட்பவர்களுக்கு என்ன தண்டனை?

2. ஸிவிக்ஸ் பகுதியில் "இந்தியாவின் பொருளாதார நிலையை விருத்தி செய்ய வேண்டிய வழிகள் சிலவற்றை எழுது" என்று கேள்வி இருக்கிறது. இக் கேள்வியைக் கேட்ட பிரகஸ்பதிகள், ஈ. எஸ். எல். ஸி. மாணவர்களை ஜான் மத்தாய்களென்றோ, ஆர். கே. ஷண்முகம் செட்டியார்களென்றோ நினைத்து விட்டார்கள் போலும்! பொருளாதார நிபுணர்களால் கூடப் பதிலளிக்க முடியாத இந்தக் கேள்வியைச் சின்னஞ் சிறு குழந்தைகளைப் பார்த்தா கேட்பது?

3. சரித்திரப் பகுதியில் பெரும்பாலான கேள்விகள் பி. ஏ. மாணவர்களுக்குக் கேட்கப்படும் கேள்விகளைப் போலவே இருக்கின்றன. ஆரம்பப் பள்ளிக்கும் உயர்தரக் கலாசாலைக்கும் வித்தியாசம் தெரியாத ஒரு மகானுபாவர் இந்தக் கேள்விகளைக் குறித்தார் போலும்!

4. கணக்குப் பேப்பரில் இப்படி ஒரு கணக்கு: "ஒருவன் 1000 மாம்பழங்கள் ரூ. 15 வீதம் வாங்கினான். 1000 ரூ. 2-8-0 வீதம் வெளியூருக்கு அனுப்பினான். அனுப்பினதில் 16% அழுகிப் போயின. 20% லாபமடைய மீதிப்பழங்களை நூறு என்ன விலைக்கு விற்க வேண்டும்?"—பகவானே! நீதான் இதைப் புரிந்து கொண்டு போட்டுக் காட்ட வேண்டும்! 1000 ரூ. 2-8-0 வீதம் அனுப்பி விட்ட பிறகு. அதாவது நஷ்டத்துக்கு அனுப்பி விட்ட பிறகு, 20% லாபம் வரவேண்டுமானால் நீ என்ன ஜாலவித்தைகள் செய்வாயோ பகவானே எங்களுக்குத் தெரியாது!

5. இறுதியாக இங்கிலீஷ் பேப்பரில் 'Rewrite as directed' என்றும் 'Pick out the Principal and subordinate Clauses' என்றும் இரண்டு கேள்விகள் உள்ளன. நிச்சயமாக எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களில் பாதிப்பேர்கூட இவற்றை எழுத முடியாது. இங்கு மற்றொரு விஷயம் குறிப்பிட வேண்டும். ஈ. எஸ். எல். ஸி. பரீட்சைக்கு ஐந்து மாதங்களுக்கு முன்புதான் இங்கிலீஷ் புஸ்தகம் மாணவர்கள் கைக்கு வந்தது. அதற்கு ஒன்றரை மாதம் முன்பு அது கெஜட்டில் அறிவிக்கப் பட்டது. இந்த நிலையில் அப் புத்தகத்தை ஆசிரியர்கள் திருப்திகரமாகக் கற்றுக் கொடுத்திருக்க முடியாது. புத்தகமும் மிகவும் கடினம். புத்தகத்திலிருந்து கேட்கப்பட்டிருக்கும் இலக்கணக் கேள்விகளோ ரொம்பவும் கடினமானது.

இத்தகைய கொடுமைகளிலிருந்து இளங் குழந்தைகளைக் காப்பாற்ற அரசாங்கமும் அறிவுள்ள பெரியோர்களும் என்ன செய்யப் போகிறார்கள்? சென்ற வருடம் ஈ. எஸ். எல். ஸி. பரீட்சையில் நடந்த இத்தகைய கொடுமைகளைத் தாங்கள் விரிவாக எடுத்துக் காட்டியும் மீண்டும் இவ் வருடமும் அப்படியே செய்திருப்பவர்களுக்கு என்ன தண்டனைதான் கொடுப்பது? சின்னஞ் சிறு குழந்தைகளுக்கு எப்போது இவ்வரக்கர்களிடமிருந்து விடுதலை கிடைக்கும்?

மதுரை — ஆர். கிருஷ்ணமூர்த்தி
6—4—50 — பி.ஏ. எல்.டி., பி. ஓ. எல்.

○●○

இவ்வாரத்தில் நடைபெற்ற ஈ. எஸ். எல். ஸி. பரீட்சை எழுதிய மாணவர்களில் நானும் ஒருவன். நான் எழுதிய பரீட்சைகளில் கணிதக் கேள்வித் தாளில் உள்ள ஒரு கணக்கைப் பாருங்கள்.

"ஒருவருடைய வீடு, நிலம் பாங்கியில் இருக்கும் ரொக்கம் எல்லாம் சேர்ந்த சொத்தின் மதிப்பு ரூ. 33,000. வீட்டின் விலை பாங்கியில் உள்ள ரொக்கத்தைக் காட்டிலும் $1\frac{1}{3}$ பங்கு அதிகம். நிலம் வீட்டின் விலையைக் காட்டிலும் 2 பங்கு அதிகம். நிலத்தின் விலையைக் கண்டுபிடி."

மேலே கண்ட கணக்கு என்னைப் போன்ற பல ஆயிரம் மாணவர்களுக்கும் விநோதமாயிருந்தன. "வீட்டின் விலை பாங்கியில் உள்ள ரொக்கத்தைக் காட்டிலும் $1\frac{1}{3}$ பங்கு அதிகம்" என்றால் "வீட்டின் விலை ரொக்கத்தைப்போல் $2\frac{1}{3}$ பங்கு" தானே? ஆனால் எங்கள் ஆசிரியர்கள் ரொக்கத்தைப் போல் $1\frac{1}{3}$ பங்குதான்

வேறொன்றும் கூற தேவையில்லை



சிறந்த பிஸ்கோத்து

# பிரிட்டானியா

AIBMA

போகாவிட்டால் ஆயிரம் நரிகளை ஏவி உன்னைத் தீர்த்து விடுவேன்."

"எங்கே வரவழை, பார்க்கலாம்! உன்னையும் அவற்றையும் ஒரு கை பார்த்து விடுகிறேன்; இல்லாவிட்டால் என் பெயர் போக்கிரி அல்ல" என்றான் குறவன்.

உடனே மாது "ஊ... ஊ... ஊ... ஊ! ஊ... ஊ!" என்று கூவினான்.

அடுத்த கணமே தன்னைச் சுற்றிப் புழுதி மேகம் சூழ்வதைக் குறவன் பார்த்தான். அந்த மேகப் படலம் நெருங்கி நெருங்கி வந்து அவனைச் சூழ்ந்து கொண்டது. மாது புழுதிப் படலத்தை ஊடுருவிச் சென்று நரிகளின் பின்னால் நின்று கொண்டான். எதிரியை நோக்கிச் சென்ற நரிகள் தம் பின்னங் கால்களால் மண்ணையும் கல்லையும் வாரி வீசின. பாவம், குறவன் கல்லையும் கழியையும் எடுத்துக் கூட்டத்தின் மீது வீசிப் பார்த்தான். அவனுடைய தற்காப்பு முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. ஆகவே, பிணம்போல் தரையில் விழுந்து விட்டான். முத்தண்ணு மெள்ள அருகில் போய் நிஜமாகவே அவன் இறந்து விட்டானா என்று பார்த்தது.

தூரத்தில் நின்று இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த மாது, "அவனை விட்டு விடுங்கள். அவனுக்கு நல்ல பாடம் கற்பித்தாகி விட்டது" என்றான்.

நரிகள் அவனை விட்டுவிட்டு, ஓட யத்தனித்துக் கொண்டிருந்த எருதைச் சூழ்ந்து கொண்டன. நரிகள் அதைக் காட்டுக்குள் துரத்தி அடித்தன. குறவன் ஆச்சரியத்துடன் அவ்விடத்தை விட்டு விரைந்து ஓடினான்.

காலையில் குறவனின் திடீர் மறைவைக் கண்டு கிராமத்துக் குடிகள் ஆச்சரியத்தில் மூழ்கினர். கிராமத்துச் சிறுவர் பெரிதும் ஏமாற்றம் அடைந்தனர். (தொடரும்)

# செல்லக் குழந்தை

**பி. எஸ். மணி**

வேங்கடராமய்யர் தம் மனைவியையும், செல்லக் குழந்தை சீனுவையும் அழைத்துக் கொண்டு தன் நண்பர் வீட்டு விசேஷத்திற்குச் சென்றிருந்தார். அவரது நண்பர் அவருக்கு ஆசார உபசாரம் செய்து காப்பி கொண்டு வந்து கொடுத்தார்.

சீனுவுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. கோபத்தில் தனது காப்பியைக் கீழே கொட்டிவிட்டான். அதற்குக் காரணம் அவனைப்போல் மற்றொரு பையன் அவனுக்கு எதிராக நின்று ஜிலேபியைக் கடித்துத் தின்று கொண்டிருந்ததுதான்.

"அப்பா! எனக்கு ஜிலேபி!" என்று கூறி அழ ஆரம்பித்து அவன் தகப்பனாரைச் சிரமப் படுத்தினான். குழந்தையின் பிடிவாதத்தைக் கண்ட அவரது நண்பர் உடனே உள்ளே சென்று ஒரு ஜிலேபியை எடுத்து வந்து கொடுத்தார். அதை வாங்கிக் கொண்டதும் சீனு மறுபடியும் ராகம் போட ஆரம்பித்தான். "ஏண்டா அம்பி! அழறே" என்று வினவினார் வெங்கடராமய்யர்.

"அப்பா! என் ஜிலேபி அவன் வைத்திருப்பதை விடச் சின்னது. இது எனக்கு வேண்டாம்." என்று சொல்லி விக்கி விக்கி அழத் தொடங்கினான். வெங்கடராமய்யர் பரிதாபமாகத் தமது நண்பரைப் பார்த்தார். உடன் நண்பர் விஷயத்தைப் புரிந்து கொண்டு உள்ளே சென்று பெரிய ஜிலேபியாகப் பார்த்துக் கொண்டு



வந்து கொடுத்தார். அதை வாங்கிக் கொண்டதும் அவனது அழுகை மறுபடியும் தொடர்ந்தது. அதைக் கண்டதும் வெங்கடராமய்யர், "என்னடா! நீ கேட்டதுதான் வந்து விட்டதே, இன்னும் ஏன் அழறே" என்று கோபத்துடன் வினவினார்.

"அம்மா வேணும். இதைக் கொடுக்கணும்" என்று விம்மலுடன் கூறினான். கேட்க வேண்டுமா? அடுத்த நிமிஷம் பெண்கள் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த அவன் தாயார் உடனே வரவழைக்கப்பட்டாள்.

சீனு தன் தாயார் வந்ததும் அவள் கையில் ஒரு ஜிலேபியைக் கொடுத்து, "அம்மா! நீ தின்னால்தான் நான் இதைத் தின்னுவேன்" என்று கூறினான். செல்லப் பிள்ளையின் வேண்டுகோளை அவள் கஷ்டப்பட்டுக் கொண்டு நிறைவேற்றினாள். அவள் ஜிலேபியைத் தின்று முடித்தாளோ இல்லையோ, உடனே சீனு பெரிசாகக் கத்த ஆரம்பித்தான். மூவரும் காரணம் புரியாமல் திகைத்தனர். சீனு 'ஹோ' வென்று கத்திக் கொண்டே, "அப்பா! அம்மா என் பெரிய ஜிலேபியைத் தின்னுட்டாளே, எனக்கு ஒண்ணும் இது வேண்டாம், போ!" என்று கூறித் தன் கையிலிருந்த ஜிலேபியை வீசி எறிந்தான். அவன் அழுகை உச்சஸ்தாயியை அடைந்தது.

துக்குப் பிறகு தலைக்குமேல் ஏதோ அசைவதுபோல இருந்தது. பிறகு யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டது.

இது, அவன் கொண்டிருந்த கொஞ்ச நஞ்ச சந்தேகத்தையும் நிவர்த்தி செய்து விட்டது. நரியுலகிலே இதுவரை அவன் பார்த்த அனுபவங்களில் எல்லாம் விசித்திரமான அனுபவமாக இருந்தது. எனினும் அவனுக்கு ஆச்சரியமாக இருந்ததே தவிர பயம் ஏற்படவில்லை. மரத்துக்கு மேலே இருந்த ஒரு சிறுவன் தன்னை அவமானப் படுத்தி விட்டதாக அவன் நினைத்தான். அதற்கு அவனை நிச்சயம் பழி வாங்க வேண்டும் என்றும், தீர்மானித்தான்.

"நீ இறங்குகிறாயா? அல்லது கல்லை விட்டு எறிந்து கொன்று விடட்டுமா?"

"நீ யார்?"

"உனக்குத் தெரியாதவன் அல்ல!"

குறவன் எகிறிக் குதித்து ஒரு கிளையைப் பற்றிக் கீழே இழுத்தான். அது முறிந்து கீழே விழுந்தது. அத்துடன் அதில் உட்கார்ந்திருந்தவனும் தொப்பென்று கீழே வந்து விழுந்தான். அவன் நிதானமாக நிலவொளியில் வந்து, "கோபப்படாதே! உன் மாட்டை ஓட்டிக் கொண்டு போ!" என்றான்.

குறவன், "நீதானா மாது? என் ஆயுளில் கிடைக்கக்கூடிய நல்ல அதிர்ஷ்டத்தை ஏன் கெடுத்தாய்? அந்தப் பருத்த நரிக்கு எவ்வளவு பரந்த முதுகு! என்ன அடர்த்தியான வால்! இந்த வருஷத்துக்கெல்லாம் வேண்டிய பணத்துக்கு அதை நம்பித்தானே இருந்தேன்? எப்படிப்பட்ட அதிர்ஷ்டச் சீட்டு அது! நீ கெடுத்து விட்டாயே! உன்னைச் சும்மா விடப்போவதில்லை. நீ ஒரு அனாதைப் பையன். ஊரில் உனக்கு வேண்டியவர்களே கிடையாது. நீ எங்கே போனாலும் எல்லாரும் உன்னை வெறுக்கிறார்கள். அப்படியிருந்தும் இவ்வளவு அக்கிரமமா? உன்னைக் கொன்று குழி தோண்டிப் புதைக்கப் போகிறேன்" என்று கத்தினான்.

மாது சிரித்துக்கொண்டே, "அதுதான் உன்னால் முடியாது. நான் வேண்டுமானால் எழுதித் தருகிறேன். அது மட்டும் அல்ல. நான் இங்கே இருக்கும்வரை, ஒரு நரியையாவது அடிக்கவோ கொல்லவோ விட மாட்டேன். நரிகள் எல்லாம் என் சிநேகிதர்கள். அவற்றை நீ ஒன்றும் செய்ய முடியாது!" என்றான்.

"உன் சிநேகிதர்களா?"

"என்னைப் புரிந்து கொள்ளும் தோழர்கள் அவை. அவற்றின் உணர்ச்சியை நான் புரிந்து கொள்ளுகிறேன். இந்த நிமிஷமே நீ இந்த இடத்தை விட்டுப்





அவன் அந்த மாட்டைப் பக்கத்துக் கிராமத்திலிருந்து பின் தொடர்ந்து வந்திருப்பான் போலிருக்கிறது. இந்த மாட்டைக் கண்டு பிடித்ததற்கு நாம் அவனை ரொம்பவும் பாராட்ட வேண்டும்'' என்று உற்சாகமாகக் கூறியது.

"நீ ஒரு அவசரக் குடுக்கை! நான் இப்போதே எச்சரிக்கை செய்கிறேன். அவன் நம்முடைய சிநேகிதன் அல்ல, விரோதிதான் என்பதில் கொஞ்சங்கூடச் சந்தேகமில்லை.—ஆமாம்!'' என்று எரிந்து விழுந்தது முத்தண்ணா.

"நான் அதன் அருகில் போனால் என்னவாம்! அவன் நம்முடைய சிநேகிதனாகவோ, சொந்தக்காரனாகவோதான் இருக்க வேண்டும். அவன் குரலிலிருந்து இது எவ்வளவு தெளிவாகத் தெரிகிறது!'' என்று முத்தண்ணாவை விட அதிகமாகப் பசியினால் வாடிக்கொண்டிருந்த அவசரக் குடுக்கை மறுபடியும் சாதித்தது.

அப்போது நரிகளின் ஊளையைப் போலவே, "ஊ......ஊ...'' என்று குறவனின் போலிக் குரல் வந்து கொண்டிருந்தது.

நரிகளும் கொஞ்சம் கொஞ்சமாக நம்பத் தலைப்பட்டன. அவசரக் குடுக்கையோ பரிபூரணமாக நம்பி விட்டது. முத்தண்ணாவுக்குக் கூட ஓரளவு நம்பிக்கை உண்டாகிவிட்டது. எதிரே ஒரே மைதானம். அந்தத் தெளிந்த நிலவொளியில் எல்லாப் பொருள்களும் தெளிவாகத் தெரிந்தன. "ஒருவேளை இது பயங்கரமான மோசடியாக முடியுமோ? அப்படியானால் நம் கதி என்ன ஆவது?'' என்று நரிகள் சற்றுத் தயங்கின. ஆனால் பசி தைரியமளிக்கவே, அவை முன்னேறிச் சென்றன.

அவை எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் நெருங்கின. முத்தண்ணா முதலில் நின்று அவைகளை அழைத்துச் சென்றது. அவசரக் குடுக்கையைப் பின்னால் வரச் செய்து, சுற்றி வளைத்துக்கொண்டு ஜாக்கிரதையாகத்தான் சென்றன. அருகே நெருங்க நெருங்க அவசரக் குடுக்கைக்கு நிச்சயமும் நம்பிக்கையும் ஏற்பட்டது. நரி வேஷத்தில் இருந்த நரிக் குறவன் இத்தனை நரிகளைப் பார்த்தவுடன் அடைந்த ஆனந்தம் சொல்லி முடியாது. முத்தண்ணாவையும் அதன் பரந்த முதுகையுமே அவன் குறிபார்த்துக் கொண்டிருந்தான். ஆம், இந்தச் சுற்று வட்டாரங்களில் இவ்வளவு நேர்த்தியான தோல் அவனுக்கு எங்கே கிடைக்கும்?

"ஊ! ஊ! ஊ! ஊ!'' — என்று அவன் சந்தோஷ மிகுதியால் ஊளையிட்டான். இந்த வரவேற்பு நரியின் ஊளையைப் போலவே இருந்து விடவே, முத்தண்ணா கூட நம்பி விட்டது. பின்னால் வந்து கொண்டிருந்த அவசரக் குடுக்கை வெகு தூரம் முன்னேறிப் போய் விட்டது!

சாமர்த்தியத்துக்கும் தந்திரத்துக்கும் நரிகள் எவ்வளவோ பெயரும் புகழும் பெற்றவை. ஆனால் இன்று ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால் அந்தப் புகழ் எல்லாம் மறைந்து போயிருக்கும். நல்ல வேளை, அப்போது அந்த நரிகளின் உயிரை அவற்றிற்குப் பரிச்சயமான ஒரு குரல் காப்பாற்றியது.

"ஓடுங்கள்! ஓடுங்கள்! அவன் யார் என்று உங்களுக்குத் தெரியவில்லையா? முட்டாள்களே! ஓடுங்கள்!''

இந்த எச்சரிக்கை நரிகளின் தாய் பாஷையிலேயே செய்யப்பட்டது. யார் இப்படிப் பேசியது என்பதை அந்த நரிகள் புரிந்து கொண்டன. இதைத் தக்க சமயத்தில் கேட்டதும் நரிகள் ஓட்டம் பிடித்தன.

இப்படி ஓடியதைக் கண்டு ஏமாற்றமடைந்த குறவன் ஒரே ஆத்திரமும் கோபமும் கொண்டான். அந்த ஆத்திரத்தில் தன் கையிலிருந்த பருத்த சிறு கழியை நரிக் கூட்டத்தின் மீது வீசினான். அது அவசரக் குடுக்கையின்மீது பலமாக வந்து விழுந்தது.

நரிகளின் பாஷையிலேயே நரிகளுக்கு எச்சரிக்கை செய்தவன் தன்னைப்போல ஒரு மனிதன் தான் என்பது குறவனுக்குச் சந்தேகமின்றித் தெரிந்தது. அவன் நரியைப் போலவே நான்கு காலால் நடந்து போய் அருகே இருந்த மரத்தின் மீது அண்ணாந்து பார்த்தான். முதலில் ஒன்றும் தெரியவில்லை. கொஞ்ச நேரத்

# நரிக்காட்டு ராஜா

எஸ். கோபாலன் ◇ மொழிபெயர்ப்பு: எஸ். வி. எஸ்.




## 1. நரிக் குறவன்

கோடை காலம் வந்தால் நல்ல நரிக்காட்டுக்கு விதவிதமான பறவைகள் வந்து சேரும். அவற்றுடன், குழந்தைகள் முதல் கிழவர் வரை எல்லோரையும் கவர்ந்த ஒரு ஆசாமியும் வந்து சேருவான். அவன்தான் நரிக்குறவன். வருஷம் தவறாமல் வருவான் அவன். இடுப்பில் கோவணம் கட்டிக்கொண்டு, முதுகில் ஒரு நரித்தோல் பையைச் சுமந்துகொண்டு கோடை காலம் ஆரம்பித்தவுடன் சொல்லி வைத்தாற்போல் வந்துவிடுவான். சாதாரணமாக அவன் தன் மனைவியுடன்தான் வருவான். அவள் ஒல்லியாக இருப்பாள். பல வர்ணக் கந்தல் துணிகளைச் சேர்த்துத் தைத்து ஓர் உடையாக்கி அதை இடுப்பில் உடுத்தி யிருப்பாள். வருஷக் கணக்காக அழுக்கு ஏறிய அந்தத் துணி ஒன்றுதான் அவள் கணவனுடைய பிதுரார்ஜிதச் சொத்து. அவள் வந்தாலும் வராவிட்டாலும், குறவனுடைய தொழிலுக்கு இன்றியமையாததாக விளங்கிய ஒட்டி உலர்ந்த ஒரு நோஞ்சல் எருது அவனுடன் வரத் தவறியதில்லை. அவர்கள் விற்பனை செய்வதற்கு ஏற்ற பலவிதப் பொருள்கள் கொண்டு வருவார்கள். மலையிலிருந்து தங்கள் கையினாலேயே பிழிந்தெடுக்கப் பட்ட தேன் கொண்டு வருவார்கள். (இந்தத் தேன் விஷயத்தில் மட்டும் புருஷன் மனைவிக்குள் அடிக்கடி சண்டை வந்துவிடும். அவன் மனைவி தன் கையினாலேதான் அந்தத் தேனை எடுத்ததாகக் கூறுவாள். சாதிக்க முடியாத இந்தக் காரியத்தைச் சாதித்த பெருமை தனக்கே உரியது என்பான்.) இதைத் தவிர யமனையும் வெல்லக்கூடிய மருந்து மூலிகைகள், கிராமத்துப் பெண்கள் ரொம்பவும் விரும்பும் பாசிமணி பவளமணிகள், நூற்றுக்கணக்கான ஊசிகள் கொண்ட மூங்கில் குழாய்கள் முதலியன கொண்டுவருவார்கள். ஊசி மிக்க நேர்த்தியானதாக இருக்கும்.

அதற்கு அத்தாட்சி அந்தக் குறத்தி உடுத்தியிருந்த துணியிலுள்ள தையல்களே போதுமானவை. இவற்றைத் தவிர இன்னும் யார் யார் என்னென்ன கேட்கிறார்களோ அத்தனை சாமான்களும் கொண்டு வருவார்கள்.

கிராமத்துச் சிறுவர்களுக்குக் குறவனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் இனம் தெரியாத ஒருவகை இன்பம் உண்டாகும். அந்த மிருதுவான நரித் தோல் பையில் இன்னும் என்னென்ன விசித்திரப் பொருள்கள் இருக்குமோ என்ற வியப்பினால் ஏற்படுவதுதான் அந்த இன்பம். அவன் பிறருக்குக் காண்பிக்க விரும்பிய பொருளைவிட இன்னும் எத்தனையோ பொருள்கள் அந்தப் பைக்குள் இருக்கின்றன என்பது நிச்சயம். குழிந்த கண்களும் பல வரிசைப் பற்களையும் கொண்ட மண்டையோட்டை அவன் அந்தப் பைக்குள்ளிருந்து எடுத்ததை எத்தனையோ தடவை பார்த்திருக்கிறார்கள். அதைப் போல இன்னும் என்னென்ன பொருள்கள் இருக்கின்றனவோ?

இந்த வருஷமும் அவன் தன் மனைவியுடனும், வழக்கம்போல் கொண்டு வரும் வியாபாரப் பொருள்களுடனும் வந்து சேர்ந்தான். மனைவி ஒரு தனியான பெருமிதத்துடன் அவன் அருகில் நடந்து சென்றாள். ஏன், அந்த நோஞ்சல் மாட்டுக்குக்கூட, அவர்களுடன் கிராமத்தில் பிரவேசித்தபோது, தான் எல்லோரையும் விட உசத்தி என்ற எண்ணம் ஏற்பட்டுவிட்டது. அவர்கள் ஊருக்குள் நுழைந்ததும் நாய்கள் குலைக்கத் தொடங்கின. வழக்கம் போல் குளக்கரையிலிருந்த பெரிய மரத்தடியில் அவர்கள் வசதியாக முகாம் போட்டுக் கொண்டார்கள்.

நரிக்குறவன் வளர்பிறைக் காலத்தில்தான் கிராமத்துக்கு வருவான். சந்திரன் உச்சியை அடைவதற்கும் கிராமத்து மக்கள் அவரவர் வீடு வாசலில் நித்திரையில் ஆழ்வதற்கும் சரியாக இருக்கும். அந்த நிசப்தமான வேளையில் நரிக்குறவன் தன் எருதுடன் காட்டை நோக்கிப் புறப்படுவான். அவன் எதற்காகக் காட்டுக்குப் போகிறான் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவன் காட்டுக்குள் போய் என்ன செய்கிறான் என்று பார்த்தவர்கள் யார்? இந்தக் கேள்வியை குழந்தைகள் அடிக்கடி கேட்கும். ஆனால் வெகு சிலருக்குத்தான் அவன் காட்டுக்குள் என்ன செய்தான் என்பது தெரியும்.

இன்றிரவு அவனை யாராவது பின்தொடர்ந்திருந்தால் அவனுடைய விசித்திரச் செய்கைகளைப் பார்த்திருக்கலாம். கிராமக் குடியிருப்பிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பால் இருந்த ஒரு பெரிய மைதானத்துக்குத் தன் எருதை ஓட்டிக்கொண்டு போய் அதைக் கீழே படுக்க வைத்தான். அந்த நன்றி விசுவாசமுள்ள மாடு கண்களை மூடிக்கொண்டு, சவம் போல் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டது. அதற்கு அருகே குறவன் குனிந்து ஒளிந்து கொண்டான். இதில் ஆச்சரியமான விஷயம் ஒன்றும் இல்லை. ஆனால் ஒரு சில நிமிஷங் கழித்து அந்தப் பக்கம் யாராகிலும் போயிருந்தால் ஒருநரி அந்த எருதின் மேல் குதித்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக்கலாம். அது அந்த எருதை முகர்வதையும், கொத்துவதையும் நரிகளுக்கு இயல்பான முறையில் ஊளையிடுவதையும் பார்த்திருக்கலாம். ஆனால் அது நிஜ நரி அல்ல. நரிக் குறவன்தான் என்பதை சுலபமாகக் கண்டுபிடிக்கமுடியாது.

எதற்காகக் குறவன் இப்படியெல்லாம் நடித்தானோ அதன் பலன் சீக்கிரமே கிடைத்துவிட்டது. புதர்களிலிருந்து நூற்றுக்கணக்கான நரிகள் அவனைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கின. நரிகள் பார்ப்பதை நரிக்குறவன் கவனித்தான். அவை தம்முள் கலந்து ஆலோசித்தன. அவை தந்திரம் மிக்கவை அல்லவா? எருது இறந்து கிடப்பதைப் பார்த்ததும் அவற்றிற்குச் சந்தேகம் உண்டாயிற்று. அந்த எருது உண்மையாகவே இறந்து கிடக்கிறதென்று அவற்றால் கொஞ்சமும் நம்பவே முடியவில்லை.

அந்த நரிகளுக்குள் வயது முதிர்ந்த நரியொன்று இருந்தது. அந்த நரியை மற்ற நரிகள் எல்லாம் முத்தண்ணா என்று அழைத்து வந்தன. முத்தண்ணா, "அந்த வழியாகக் கொஞ்ச நாழிகைக்கு முன்தான் போய்விட்டு வந்தேன். அப்போது, இந்த எருதை நான் அங்கே பார்த்ததாக ஞாபகம் இல்லையே; திடீரென்று அது இங்கே எப்படி வந்தது?" என்று கேட்டது.

ஒரு இளம் நரி, "அந்த மாடு ஒரு வேளை இப்போதுதான் இறந்து விழுந்திருக்கலாம்; நம்மில் ஒருவன் அதன் பக்கத்தில் குதித்துக் கொண்டிருக்கிறான்.



தன் கணவனுக்கு நேர்ந்த கதியை அறிந்த அவன் மனைவி, "நாதா, பணத்தைக் கண்டபடி செலவு செய்யலாகாது என்று நான் பல தடவை கூறினேன். உங்கள் நண்பர்களை நம்பி என் பேச்சைத் தள்ளினீர்கள். உங்கள் நண்பர்கள் அனைவரும் காரியவாதிகள். கஷ்ட காலத்தில் கை கொடுக்கத் தயாராயில்லாதவர்கள். இதை இதுவரை நீங்கள் அறியாதது பெரும் பிசகு" என்று கூறினாள்.

மனைவி சொன்னதைக் கேட்ட நாருடன், "உன் பேச்சைக் கேட்காமல் அசட்டுத்தனம் செய்து விட்டேன். என்னைவிட வயதில் சிறியவளாயிருந்தாலும் உனக்கு நிரம்ப உலகஞானம் இருக்கிறது. என் நண்பர்கள் எல்லோரும் பணக்காரர்கள். நான் அவர்களிடம் இதுவரை காட்டிய அன்புக்கு அவர்கள் கைம்மாறு செய்யாமலிருக்க மாட்டார்கள். நான் இப்பொழுதே அவர்களிடம் சென்று வேண்டிய உதவி பெற்று வருகிறேன்" என்றான்.

உடனே பேரழகி, "நண்பர்களிடம் நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கை இன்னும் நீங்கவில்லை. அவர்கள் யாவரும் பட்டுப் பூச்சிகளைப் போன்றவர்கள். பூவில் தேன் இல்லாவிட்டால் எப்படிப் பட்டுப்பூச்சி அதை அணுகாதோ, அதேமாதிரி உங்கள் நண்பர்களும் பசையில்லாத உங்களுக்கு உதவ மாட்டார்கள்" என்றாள்.

நாருடன் தன் மனைவியின் பேச்சுக்குச் செவி சாய்க்கவில்லை. அவளைப் பார்த்து, "பெண்ணே, நீ அனாவசியமாகக் கவலைப்படாதே. இனி உல்லாச வாழ்க்கை நடத்துவதை விட்டு விடப் போகிறேன். என் நண்பர்கள் கொடுக்கும் பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்யப் போகிறேன். நாளைக்கே அவர்களைப் பார்க்கிறேன்" என்றான்.

இந்தச் சம்பாஷணை நடந்த மறுநாள் நாருடன் தன் நண்பர்கள் ஒவ்வொருவர் வீட்டுக்கும் சென்றான். ஆனால் ஒவ்வொருவனும் நாருடன் வந்திருப்பதைத் தன் வேலையாள் மூலம் அறிந்ததும், அவன் கண்ணில் படாமல் மறைந்து கொண்டான். இதைப் பார்த்த நாருடனுக்கு ஆச்சரியமும் ஆத்திரமும் ஏற்பட்டது. தன் நண்பர்கள் இவ்வாறு செய்வார்கள் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. பணம் கொடுக்காவிட்டாலும் நான்கு வார்த்தையாவது பேசக் கூடாதா? இதை நினைத்தபோது அவனுக்கு மிக்க வருத்தம் உண்டாயிற்று. (தொடரும்)

1. பச்சை பச்சை டாக் டாக்
பால் பால் டாக் டாக்
குண்டு குண்டு டாக் டாக்
குதிரை வால் டாக் டாக்.
2. அண்ணன் தம்பி நால்வர். ஒருவன் தண்ணீரில் போடப்பட்டதும் மிதக்கிறான். இரண்டாமவன் கரைந்து விடுகிறான். மூன்றாமவன் அடியில் தங்கி விடுகிறான். நாலாமவனும் மிதக்கிறான். இந்த இரண்டும் என்ன?

சென்ற வாரக் கணக்குக்கு விடை:
ரூ. 55,92,405—5—3

## தீரச் சிறுவன்



"ஸார், பேப்பர்!" "ஸார், பேப்பர்!" என்று கூவியவண்ணம் ரயில்வே ஸ்டேஷனில் அங்குமிங்கும் சென்று கொண்டிருந்தான் ஒரு பையன். ரயில் தண்டவாளங்களின் நடுவில் ஒரு குழந்தை விளையாடிக் கொண்டிருந்ததை அவன் திடீரென்று கவனித்தான். ரயில் கொஞ்ச தூரத்தில் வந்து கொண்டிருந்தது. இதோ, ரயில் நெருங்கி விட்டது! பேப்பர்களை 'பொத்'தென்று கீழே போட்டான் அவன். ஓடிப் போய்க் குழந்தையைத் தன் இரு கைகளாலும் வாரி யெடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு விரைந்து ஓடி வந்தான். குழந்தையின் உயிரும் பையனின் உயிரும் தப்பின. இன்னும் ஒரு வினாடி கழிந்திருந்தால்கூட அவர்கள் இருவரும் இறந்திருக்கக் கூடும். இந்த வீரச் செயல் புரிந்த பையன்தான் பிரபல விஞ்ஞானி தாமஸ் ஆல்வா எடிஸன்.—டி. கே. பிரசாத்.




"எஜமான், நான் சொல்வதைக் கேட்காமல் செலவு செய்தீர்கள். தோட்டம் துரவு, வியாபாரஸ்தலங்கள், டணம் எல்லாம் போய் விட்டன. இனி செலவு செய்வதற்கு ஒன்றுமே இல்லை" என்று மரியாதையாகக் கூறினான்.

நாருமுடனுக்கும் அவனுடைய குமாஸ்தாவுக்கும் நடந்த இந்தச் சம்பாஷணையை அங்கு வந்திருந்த விருந்தினர்களில் ஒருவன் மறைவான இடத்தி லிருந்து கேட்டு விட்டான். இந்தச் செய்தியை அவன் மற்ற விருந்தினர்களுக்கு ரகசியமாக அறிவித்தான். நாருமுடனின் உண்மை நிலையை அறிந்த விருந்தினர்கள், இனி அவனைச் சுற்றுவதில் பிரயோசனமில்லை என்பதை அறிந்துகொண்டு ஏதோ சாக்குச் சொல்லி விட்டு விருந்து மண்டபத்திலிருந்து நழுவிவிட்டார்கள்.

இவ்வளவு நாளாகத் தன்னைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்த நண்பர்கள் ஏன் இன்று விருந்து முடிவதற்குள் ஒவ்வொருவராக வெளியேறுகின்றனர் என்பது அவனுக்கு விளங்கவில்லை. விருந்தினர் எல்லோரும் விடை பெற்றுச் சென்றவுடன் தன்னந் தனியாகி விட்ட நாருமுடன் பாரசீகப் பேரழகியாகிய தன் மனைவி இருக்கும் அறைக்குச் சென்றான். அவளிடம் தனக்கு நேர்ந்த துரதிர்ஷ்டத்தைக் கூறி வருத்தப்பட்டான்.

தொடங்கினார்கள். அவன் ஒரு அடி எடுத்து வைத்தால் பத்து அடி எடுத்துவைக்கும்படி தூண்டினார்கள் சிநேகிதர்கள். நாருமன் வீட்டில் தினந்தோறும் விருந்து நடந்தது. தங்கத் தட்டுகளில் விலை உயர்ந்த பக்ஷணங்களும் மதுவகைகளும் பரிமாறப் பட்டன.

தன் கணவன் கணக்கின்றிச் செலவு செய்வதைப் பார்த்த பேரழகி கவலை கொண்டாள். ஒரு நாள் நாருமனைப் பார்த்து, "நாதா, இவ்வாறு செலவு செய்தால் நமது பணம் கரைந்து விடும். உங்கள் உடம்பும் விரைவில் கெட்டுப் போகும். இன்று உங்களுடன் கூடிக் குலாவும் நண்பர்கள் பணம் செலவான பிறகு உங்களைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்கள்" என்றாள்.

தலைகால் தெரியாமல் செலவு செய்பவர்களுக்கு நல்ல வார்த்தைகள் காதில் விழாது. தன் மனைவியின் புத்திமதியை நாருமன் லட்சியம் செய்யவில்லை. அவளைப் பார்த்து, "கண்மணி, நீ எதற்கும் கவலைப்படாதே, இளமையும் பணமும் உள்ளவரையில் நன்றாக இன்பம் அநுபவிக்க வேண்டும். நமக்குப் பணம் ஏராளமாக இருக்கிறது. வா, ஆனந்தமாக இருக்கலாம்" என்று ஆறுதல் கூறினான்.

இன்ப வாழ்க்கையில் காலங் கழித்ததால் நாருமனுக்குத் தான் கொடுக்க வேண்டிய கடனைப் பற்றிய கவலையே ஏற்படவில்லை. அவனுடைய பிரதம குமாஸ்தா கடன் பாக்கியைப் பற்றி ஞாபகப் படுத்தினால் அதை அவன் காதில் வாங்கிக் கொள்வதில்லை. அது மட்டுமல்ல; தன் குமாஸ்தாவைப் பார்த்து, "உனக்கு வேறு வேலை இல்லையா? கடன் அதிகமானால் என்ன? வரும் விருந்தாளிகளுக்குச் சுவையான விருந்துகள் தயாரித்துப் பரிமாறுவதில் கவனம் செலுத்து. கடன்களைப் பற்றி என் காதில் போடாதே!" என்று எச்சரிக்கை செய்தான்.

நண்பர்களுக்கு விருந்தளிப்பதுடன் நாருமன் நிற்கவில்லை; அவர்களுக்கு விலையுயர்ந்த பரிசுகளும் வழங்கினான். கொடுக்கிறவன் கொடுத்தால் வாங்கிக் கொள்பவன் ஆட்சேபணை செய்வானா? நாருமனின் நண்பர்கள் அவன் கொடுத்ததையெல்லாம் வாங்கிக் கொண்டனர்.

இவ்வாறு ஒரு வருஷ காலம் மனம் போனபடி வாழ்க்கை நடத்தி வந்தான். வருஷக் கடைசியில் தன்னுடைய சொத்துக்கள் யாவும் கரைந்து விட்டதைக் கண்டான். இனி செலவு செய்ய ஒன்றும் இல்லை என்பதை உணர்ந்தான். இந்த நிலையில் ஒருநாள் நாருமன் தன் நண்பர்களுக்கு ஒரு பெரிய விருந்தளித்துக் கொண்டிருந்தான். அச்சமயம் அவனுடைய பிரதம குமாஸ்தா தனியாக அவனை அழைத்து



பாப்பா மலர்

# அடிமைப் பெண்

## 3. மந்திரி குமாரன் ஏமாற்றம்

ரா.கி

நூருடீன் மண்டியிட்டு வணங்கி அவ்வாறே செய்வதாகத் தன் தந்தைக்கு வாக்களித்தான்.

கொஞ்ச காலம் கழித்து அவனுக்கும் பாரசீகப் பேரழகிக்கும் கல்யாணம் நடந்தது. தன் மனைவியுடன் அவன் சந்தோஷமாகக் காலங் கழிக்கத் தொடங்கினான்.

மந்திரி தன் மகனைத் திருப்திசெய்து விட்டான். இனி அரசனுக்கு என்ன சமாதானம் சொல்லுவது என்ற கவலையில் அவன் ஆழ்ந்தான். அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கித் தருவதாக அரசனிடமிருந்து அவன் பணம் வாங்கி விட்டான். ஆனால் வாங்கிய பெண்ணை மகனுக்கு அளித்து விட்டான். பாரசீகப் பேரழகி தன் வீட்டில் இருப்பது அரசனுக்குத் தெரியாமலிருக்க என்ன வழி செய்யலாம் என்று மந்திரி காஹன் சிந்திக்கலானான். கடைசியில் அதற்கும் ஒரு வழி கண்டு பிடித்தான். அரசனைக் கண்டு, "அரசே, தங்கள் மனதுக்குப் பிடித்தமான பெண்ணைக் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. தங்கள் அழகு, அந்தஸ்து, குணம் இவைகளுக் கேற்ற பெண் எங்கே கிடைக்கப் போகிறாள்?" என்று கூறினான். அரசனும் மந்திரி கூறியதை நம்பி தன் ஆசையை நாளடைவில் மறந்து விட்டான்.

காஹன் வீட்டில் பேரழகி இருப்பது அரசனின் மற்றொரு மந்திரியான ஸவிக்கு எப்படியோ தெரிந்து விட்டது. ஆனால் இதைப் பற்றி மன்னனிடம் அவன் ஒன்றும் சொல்லவில்லை. ஏனெனில், காஹன் மன்னனின் நம்பிக்கையைப் பெற்றவன். அவனைப் பற்றி அவதூறாகச் சொன்னால் தன்னைப் பொறாமைக்காரன் என்று மன்னன் நினைக்கக் கூடும். ஆகையால் ஸவி வாய்திறக்காமல் இருந்து விட்டான்.

இவ்வாறு ஒரு வருஷ காலம் வரை பேரழகியைப் பற்றிய ரகசியம் காஹன் குடும்பத்தாரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாமல் இருந்தது. திடீரென்று ஒரு நாள் காஹன் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையானான். நோய் தினம் தினம் அதிகரித்து வந்தது. தான் இறந்து போவது நிச்சயம் என்பதை அறிந்த அவன் தன் மகனை அருகில் அழைத்துக் கூறினான்: "மகனே, இனி நான் பிழைக்க மாட்டேன். நீ உன் மனைவியை விட்டுப் பிரிவதில்லையென்றும், அவளை யாருக்கும் விற்பதில்லை என்றும் எனக்கு வாக்களித்ததை மறக்காதே."

நூருடீனும் அவ்வாறே சபதம் செய்து கொடுத்தான். இதைக் கேட்டதும் மன அமைதியுடன் காஹன் இறந்து விட்டான். நூருடீன் மிகுந்த மரியாதையுடன் அவன் சவத்தை அடக்கம் செய்தான். மன்னனின் மதிப்புக்கும், ஜனங்களின் அன்புக்கும் பாத்திரமாயிருந்த மந்திரியின் மரணத்தைக் குறித்து அரசனும் மக்களும் வெகுநாள்வரை துக்கத்தில் ஆழ்ந்திருந்தனர்.

மந்திரி காஹன் உயிரோடிருந்த வரையில் நூருடீன் கல்வி கற்பதிலேயே ஈடுபட்டிருந்தான். கேளிக்கைகளில் பொழுது போக்குவதற்கு அவனுக்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. ஆகையினால், தந்தை மரணத்தினால் ஏற்பட்ட துக்கம் மறைந்தவுடன், நூருடீன் உல்லாசமாகப் பொழுது போக்குவது என்று முடிவு செய்தான். அதற்காகத் தந்தை வைத்து விட்டுப் போன பணத்தைச் செலவு செய்ய ஆரம்பித்தான். பணத்தை ஒருவன் செலவு செய்ய ஆரம்பித்தால் அவனைச் சுற்றி உல்லாச புருஷர்கள் கூடுவது சகஜம் அல்லவா? அதே மாதிரி நூருடீனைச் சுற்றிப் பல இளைஞர்கள் கூடத்

மனைவிபோல உமாநாதன் என்னைக் கோபமாகப் பார்த்தான். நான் பதிலுக்கு ஓநாயைப் பார்க்கும் ஆட்டுக் குட்டியைப் போல் பரிதாபமாக அவனைப்பார்த்தேன்.

"நீ சுவாமி வேதானந்தாவைச் சந்தேகித்தது எங்களுக்கு மிகவும் அவமானமாய்ப் போய் விட்டது; அவர் பூர்வோத்திரம் உனக்குத் தெரிந்தால் இப்படியெல்லாம் சந்தேகப்பட்டிருக்க மாட்டாய். அவர் போலிச்சாமியாரா யிருந்தால் எங்களிடம் தப்ப முடியுமா? கடைசியில் அவர் பணத்தை வாங்கிக் கொண்டாரா, பார்த்தாயா?" என்று உமாநாதன் மூச்சு விடாமல் பேசினான். பிறகு "இப்போதாவது நீ உனக்கு வேலை எப்போது கிடைக்குமென்று ஒரு கேள்வி எழுதி அதை இந்தக் கவருக்குள் போட்டுப் பத்து ரூபாயையும் கொடு. அவர் கட்டாயம் அதற்கான பதிலைத்தான் இதில் எழுதி வைத்திருப்பார்" என்றான்.

உடனே நான், "சரி, உன் இஷ்டம். பத்து ரூபாயைக் கொடுத்து விடுகிறேன். ஆனால் இப்போது நான் எழுதும் கேள்வி என் வேலையைப் பற்றியது அல்ல. வேறு விஷயத்தைப் பற்றி" என்று சொல்லி விட்டு, ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து உமாநாதனிடம் நீட்டினேன். அப்போது சுற்றியிருந்த மாணவர்கள் எல்லாருடைய முகத்திலும் சந்தோஷக் குறி தென்பட்டது!

உமாநாதன் என்னிடம் ஒரு காகிதத்தையும் பேனாவையும் நீட்டினான். நான் அதை எடுத்துக்கொண்டு தனியாக ஒரு மூலைக்குப்போய் எழுதப் போனேன். அப்போது சில மாணவர்கள் என்னை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

"ஒரு கேள்வி எழுத எவ்வளவு நேரம்?" என்று சொல்லிக் கொண்டே உமாநாதன் என் அருகில் வருமுன், அந்தக் காகிதத்தை மடித்துக் கவரில் போட்டு ஒட்டி விட்டேன்.

சாமியாரின் பதிலைக் கொண்ட கவரை எடுத்து உமாநாதன் மேஜைமீது போட்டான். எல்லாரும் ஒரு அபூர்வப் பிராணியைப் பார்ப்பது போல என்னைப் பார்த்தார்கள். நான் மெதுவாகச் சாமியாரின் உறையைக் கிழித்தேன். உள்ளே இருந்து ஒரு சிறிய பச்சைக் காகிதம் வெளியே வந்து விழுந்தது. அடாடா, ஏதாவது பூகம்பம் வந்து விட்டதா என்ன? அப்போது அந்த மாணவர்கள் போட்ட கூச்சலும் செய்த அமர்க்களமும் சட்ட சபைகூட தோற்றுவிடும் போலிருந்தது!

"ஸார்! ஏமாந்து விட்டீர்களா?" என்றான் ஒரு மாணவன்.

"ஏமாந்து விட்டீர்களா, ஸார்?" என்றான் அதையே திருப்பி இன்னொருவன்.

"ஐயோ, பாவம்!" என்று அனுதாபம் காட்டினான் மற்றொருவன்.

நான் ஒன்றுக்கும் வாயைத் திறக்காததைக் கண்டு, அதிர்ச்சியால் ஒரு வேளை உட்கார்ந்தபடியே மூர்ச்சை அடைந்து விட்டேனோ என்று எல்லாரும் நினைத்து, "தண்ணீர்! தண்ணீர்" என்று கத்தினார்கள். ஆனால் வழக்கம்போலத் தண்ணீர் கொண்டுவர யாரும் இருந்த இடத்தை விட்டுக்கூட நகரவில்லை!

ஆனால் உமாநாதனை மட்டும் அங்கே காணோம். ஒரு மாணவனை விட்டு உடனே அவனை அழைத்துக் கொண்டுவரச் சொன்னேன். நான் கோபித்துக் கொண்டு விட்டேனோ என்று சிலர் பயந்து, "ஸார், இதெல்லாம் விளையாட்டுக்காகச் செய்தது. எங்கள் கல்லூரி நாடகத்துக்காக நாளையிருந்து டிக்கட் விற்பனை செய்ய நினைத்திருந்தோம். நீங்கள் ஒத்திகை நடக்கப் போகும் சமயத்தில் வந்ததால், முதல் டிக்கட்டை விற்பனை செய்ய உமாநாதன் இந்தப் புது முறையைக் கையாண்டான்! சாமியார் நாடகச் சாமியார்தான்! தயவு செய்து எங்களுக்காக அவன்மீது கோபித்துக் கொள்ள வேண்டாம்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

சற்று நேரம் கழித்து உமாநாதன் உல்லாசமாக வந்தான். என்னுடைய கேள்வி அடங்கியிருந்த உறையை அவன் அலட்சியமாகக் கிழித்தான். ஆனால் அதில் எழுதியிருந்த விஷயத்தைக் கண்டதும் அவன் முகத்தில் அசடும் ஆச்சரியமும் கலந்து வழிந்தது. மெதுவாக எல்லாரும் நான் எழுதியிருந்ததைப் படித்தார்கள். அவர்களுடைய முகத்தில் அப்போது ஆயிரம் கேள்விக்குறிகள் உண்டாயின!

என்னுடைய கடிதாசியில் கண்டிருந்த விஷயம் இதுதான்: "ஐயா! நாடகச் சாமியாரே! அஜாக்கிரதையால் இப்போது டிக்கட் புத்தகத்தைக் கீழே போட்டதுபோல் நிஜ நாடகத்தில் உன்னுடைய தாடியை நழுவவிடாதே! நான் ஏமாந்துபோய் பத்து ரூபாய் கொடுக்கவில்லை. தெரிந்துதான் கொடுத்தேன்!"

உமாநாதன் மிக்க ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்து, "உனக்கு இது எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான்.

"நான்தானே அந்த டிக்கட் புத்தகத்தை அச்சடித்துக் கொடுத்தேன்—இரண்டு மாதமாக நான் 'அவியல் அச்சுக்கூட'த்தில் மானேஜராக இருக்கிறேன், தெரியாதா உனக்கு?" என்றேன் நான்.

அவர்களுடைய ஆச்சரியம் இன்னும் பலமடங்கு அதிகமாயிற்று.

யிருந்த பத்து மாணவர்களும் ஒரே சமயத்தில் அதை நோக்கிப் பாய்ந்தார்கள். ஆனால் உமாநாதன் தான் மின்னல் வேகத்தில் பாய்ந்து எடுத்து அதைச் சாமியாரிடம் கொடுக்க முடிந்தது. சாமியாரும் அதே வேகத்தில் அதை வாங்கி பாக்கிப் புத்தகங்களின் இடையில் வைத்துக் கொண்டு விட்டார். இச்சம்பவம் கண்கொட்டும் நேரத்தில் நடந்தாலும் எனக்கு ஒரு பெரிய உண்மை சட்டென்று விளங்கிவிட்டது. அதனால் எனக்குச் சாமியாரின் மீதிருந்த முக்கால் வாசி சந்தேகம் தீர்ந்து விட்டது!

சாமியார் அப்போது நாற்காலியை விட்டு எழுந்து, உமாநாதனை நோக்கி, "நண்பருக்கு தருமம் செய்ய மனம் இருந்தாலும் என்னைப் பற்றி இன்னும் நம்பிக்கை உண்டாக வில்லை போலும். — இருக்கட்டும்; ஆனால் இன்னொரு புதிய விஷயம் சொல்கிறேன். அவர் என்னை என்ன கேள்வி கேட்க வேண்டுமென்று நினைக்கிறாரோ அதற்கான பதிலை முன்னதாகவே நான் எழுதிக் கொடுத்துவிடுகிறேன். அப்போதாவது என்னைப் பற்றிய சந்தேகம் அவருக்கு நீங்குகிறதா வென்று பார்ப்போம். ஆனால் பத்து ரூபாயை மாத்திரம் தருமத்திற்கென்று ஒதுக்கிவிட வேண்டும்" என்று சொல்லிவிட்டு என் பதிலையும் எதிர் பாராமல் அருகேயுள்ள ஜன்னலோரமாகப் போனார். சற்று முன்பு கீழே விழுந்த அதே பச்சைப் புத்தகத்தை எடுத்தார். அதிலிருந்து ஒரு காகிதத்தைக் கிழித்தார். அதில் அவர் எதையோ எழுதுவதுபோல் தோன்றியது. பிறகு அதை மடித்து ஒரு உறையில் போட்டு ஒட்டி உமாநாதனிடம் கொடுத்துவிட்டு, "தம்பி! இந்த உறையில் என் பதில் அடங்கி யிருக்கிறது. கேள்வியை உன் நண்பரிடம் எழுதி வாங்கிக்கொள். ஆனால் அவர் தருமத்திற்காகப் பத்து ரூபாயைக் கொடுத்த பிறகே என் உறையைத் திறக்கவேண்டும். என்னைப் பற்றிய உண்மை நான் போன பிறகுதான் உன் நண்பருக்குத் தெரியும்!" என்று சொல்லிவிட்டுக் கீழே இறங்கி மறைந்தார் சுவாமி வேதானந்தா. அவரை வழி யனுப்பிவிட்டு வர இரண்டு மாணவர்கள் அவருடன் போனார்கள்.

அந்தச் சிறிய பச்சைப் புத்தகத்தை நான் இரண்டாம் தடவையாகப் பார்த்ததும் எனக்குச் சாமியாரிடமிருந்த கொஞ்சநஞ்ச சந்தேகமும் தீர்ந்துவிட்டது!

சாமியார் போன பிறகு, புடவை வாங்கி வர மறந்துவிட்ட கணவனைப் பார்க்கும்



# சந்தேகம் தீர்ந்தது!

**எம். எஸ். எம்.**

உண்மையைப் பொய் போலக் கூறுவதிலும் பொய்யை நிஜம் போலத் திரிப்பதிலும் உமாநாதனுக்கு இணை அவனே தான். சொல்லின் நயத்தாலும் கதை ஜோடிக்கும் வேகத்தாலும் கேட்பவர்களைத் திகைக்க வைத்துவிடுவான். பிறரை நையாண்டி செய்வதில் மன்னனாக விளங்கினான். போன வருடம் நான் கல்லூரியை விட்ட பிறகு கூட எனக்குப் பொழுது போகாவிட்டால் அவனைத் தேடி அவன் இருக்கும் ஹாஸ்டலுக்குப் போவது வழக்கம்.

எனக்கு வேலை கிடைத்து இரண்டு மாதங்களாகியும் உமாநாதனைப் பார்க்கவே இல்லை. ஆகையால் அவனைப் பார்க்கலாமென்று ஹாஸ்டலை நோக்கி நடையைக் கட்டினேன். அவனுடைய அறை திறந்திருந்தாலும் ஆளைக் காணவில்லை. அங்கிருந்த வேலையாளைக் கூப்பிட்டு உமாநாதன் வேறு எந்த அறையிலிருந்தாலும் உடனே அழைத்து வரச் சொன்னேன். சிறிது நேரம் கழித்து உமாநாதன் வந்தான். வந்தவன் வேகத்துடன், "உடனே கிளம்பி மெத்தைக்கு வா" என்று சொன்னான்.

நான் ஒன்றும் புரியாமல், "என்ன அவசரமான விஷயம்?" என்றேன்.

"சீக்கிரம் போகாவிட்டால் சுவாமி வேதானந்தா கிளம்பிப் போய் விடுவார். கிளம்பு உடனே!" ஒன்று துரிதப் படுத்தினான் உமாநாதன்.

ஆச்சரியத்துடனும் திகைப்புடனும் அவனைத் தொடர்ந்து மேலே போனேன். அங்கே ஹாலில் தாடி மீசையுடன் காணப்பட்ட ஒருவர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். சந்நியாசி உடை அணிந்திருந்த அவர் கையில் ஒரு கட்டுப் புத்தகங்கள் இருந்தன. அவரைச் சுற்றிப் பத்துக் கல்லூரி மாணவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். எனக்கு சாமியார்களிடம் நம்பிக்கை இல்லாவிட்டாலும், மரியாதைக்காக அவரை நோக்கி ஒரு கும்பிடு போட்டேன். உமாநாதன் என்னை அவரிடம் அறிமுகப்படுத்தி வைத்தான்.

அப்போது அந்த சாமியார் என் நண்பனிடம் தனக்கு நேரமாய் விட்டதென்றும், எனக்கு அவரால் ஏதாவது ஆக வேண்டுமென்றால் உடனே தெரிவிக்கும் படியாகவும் சொன்னார். உடனே உமாநாதன் என்னைச் சற்று அப்பால் அழைத்துப் போய், ஒரு துண்டுக் காகிதத்தையும் பேனாவையும் என்னிடம் கொடுத்து, "உனக்கு எப்போது வேலையாகுமென்று ஒரு கேள்வியை இதில் எழுதி ஒரு கவருக்குள் போட்டு ஒட்டிவிடு. அதைப் பிரிக்காமலேயே சுவாமி வேதானந்தர் உன் கேள்விக்குப் பதிலை எழுதி இன்னொரு கவருக்குள் போட்டு ஒட்டிக் கொடுத்து விடுவார். உன் கேள்விக்குப் பத்து ரூபாய் அவரிடம் கொடுக்க வேண்டும். ஆனால் அந்தப் பணம் தருமத்திற்கே செலவழிக்கப் படுமென்று அவர் சொல்கிறார்" என்று மெதுவாகக் காதோடு சொன்னான்.

எனக்குச் சங்கடமாய்ப் போய்விட்டது. முதலில் அந்தச் சாமியாரைப் பார்த்தவுடனேயே எனக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. மேலும் முழுசாகப் பத்து ரூபாயை ஏமாந்து போய் அவரிடம் கொடுக்க எனக்கு மனமும் இல்லை. ஆனால், அதே சமயம் இந்தச் சாமியாரைப் பரீட்சை பண்ணி அவர் குட்டை உடைக்க வேண்டுமென்று என் மனம் ஆசைப்பட்டது. பத்து ரூபாயை நினைத்த போது மனம் மீண்டும் பின் வாங்கியது.

என்னுடைய இந்த அவஸ்தையைக் கண்ட சாமியார் உமாநாதனை நோக்கி, "தம்பி! உன் நண்பர் என்னைப் பற்றிச் சந்தேகப்படுகிறார் போலிருக்கிறது. தருமம் செய்வதாகச் சொல்லி நான் பணத்தை ஏமாற்றிப் பறிக்கிறேனென்று அவர் நினைக்கிறார். எப்போது அவருக்கு என்மீது இந்தச் சந்தேகம் உண்டாயிற்றோ, இனிமேல் நான் அவரிடம் சல்லிக் காசுகூட வாங்க மாட்டேன். ஆனால் அவர் பத்து ரூபாயை உன்னிடமோ, இங்கிருக்கும் மற்ற நண்பர்களிடமோ கொடுத்து விடட்டும். அவர்கள் அந்தப் பணத்தைக் கொண்டு ஏழைகளுக்கு உணவளிக்கட்டும்" என்று சொன்னார்.

என்னை இந்த இக்கட்டான நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டதை நினைக்க நினைக்க எனக்கு உமாநாதன் மேல் கோபம் பொங்கிற்று.

அப்போது திடீரென்று ஒரு சிறு சம்பவம் நடந்தது.

சாமியார் தம் கையில் வைத்திருந்த புத்தகக் கட்டிலிருந்து ஒரு சிறிய பச்சைப் புத்தகம் கீழே விழுந்து விட்டது. அது கீழே விழுந்த வினாடியிலேயே அங்கு கூடி

றம் இருந்து கொண்டே யிருப்பதைக் காண்கிறோம். அதைப் போலவே அகங்காரமும். அது பொல்லாதது. மற்றவர்கள் தங்கள் அகங்காரத்தை நீக்கிக் கொண்டாலும் கொள்ளலாம். துறவியின்பாடு வெகு கஷ்டம். 'நான்' என்பதைப் பக்தி வழியில் செலுத்தி மெள்ளத் திருத்திக் கொண்டு போனால் பக்குவமடைந்து பழுத்துத் தளர்ச்சி யடைந்து நீங்கும்.

* * *

**ப**டித்துப் பட்டம் பெற்ற வைத்தியர் ஒருவர் வந்து நோய் வாய்ப் பட்ட குழந்தையைப் பார்த்துவிட்டு, அதன் தாயிடம், "கவலை வேண்டாம். நான் சொஸ்தப்படுத்தி விடுகிறேன். குழந்தையின் உயிருக்கு நான் பொறுப்பு" என்று கூறுகிறார்.

இப்படி வைத்தியர் பேசும்போது ஆண்டவன் நகைக்கிறான் என்கிறார் ராமகிருஷ்ண பரமஹம்ஸர். உயிருக்குக் காவலும் எஜமானனும் வைத்தியன் அல்ல. அது ஆண்டவனுடைய திருவிளையாடல்.

அண்ணன் தம்பி இருவர், ஒரு குடும்பமாக இனிமேல் வாழ முடியாது என்று தீர்மானித்து நிலத்தைப் பங்கிட்டுக் கொள்ள ஏற்பாடு செய்து விட்டார்கள். கயிற்றைப் பிடித்து வயலை அளந்து "இது உன்னுடைய நிலம், தம்பி! — இது என்னுடைய நிலம்" என்று அண்ணன் சொல்லுகிறான். அப்போதும் ஆண்டவன் சிரிக்கிறான் என்கிறார் பகவான் ராமகிருஷ்ணர். நிலையும் சுதந்திரமும் அற்ற ஒரு ஜீவன் "இது என்னுடையது" என்று பேசும்போது ஆண்டவன் சிரிக்காமல் என்ன செய்வான்?

* * *

**ப**ல ஆண்டுகளுக்கு முன் மேல் நாட்டில் ஒரு கிறிஸ்தவத் துறவி — வாலிபர் — துறவிமடத்தில் சேர்ந்து அங்கே மற்ற துறவிகளுக்காகச் சமையல் வேலையும் வேறு குற்றேவல் பணிகளும் செய்து வந்தார். இவர் அதிக படிப்பில்லாதவர்; வயதிலும் சிறியவர். ஆயினும் மகா புனித உள்ளம் படைத்த பக்தர். சமையல் வேலை, துணி துவைத்தல், சட்டி பானை கழுவுதல் முதலிய எல்லாப் பணிகளும் நேரடியாக ஆண்டவனுக்குச் செய்வதாகவே எண்ணிச் செய்து வந்தார். தியானம், ஜபம் இவற்றிற்குக் குறிப்பான காலமோ, இடமோ கிடையாது. எப்போதும் எந்த வேலை செய்து கொண்டு எந்த இடத்திலிருந்தாலும் அவருடைய பக்கத்தில் ஆண்டவன் இருப்பதாக அவர் கண்டார். கடவுள் அவருக்கு ஒரு நிரந்தர சகாவாகப் போய் விட்டார். தன் பக்கத்தில் இருந்தும் படுத்தும் விளையாடியும் தன்கூட இருந்து வேலை செய்து வருவதாகவே ஆண்டவனை அவர் கண்டார். இவருடைய பக்தியும் இடையறு ஆனந்தமும் மடத்தில் வசித்துவந்த மற்ற துறவிகளுக்கு ஒரு வியப்பான நிகழ்ச்சியாக இருந்தது. பிரதர் லாரென்ஸ் (Brother Lawrence) என்ற பெயர் கொண்ட இந்தத் துறவியின் சரித்திரத்தைப் படிக்கிறபோது, பிருந்தாவன கோபிகளுடைய கதையைப் போலவும், பகவான் ராமகிருஷ்ணருடைய சரித்திரத்தைப் போலவும் தொனிக்கிறது. எந்த தேசத்திலும் எந்தக் காலத்திலும் சில மகாத்மாக்கள் ஜீவன் முக்த நிலை அடைந்து, ஆண்டவனை நேரில் காணப் பெறுகிறார்கள்.



செயலும் செய்பவன். நான் செய்வது ஒன்றும் இல்லை. பொம்மை போல் ஆட்டப்படுகிறேன். நீதான் என்னைச் செய்விக்கிறாய்; அனைத்தும் உன்னுடைய மகிமை. நான் எந்த வேலையை யாவது நன்றாகச் செய்தேனானால், அது உன்னுடைய சிறப்பு; வேறொன்றுமில்லை. இந்த வீடு, இந்தக் குடும்பம் என்னுடையது அல்ல. இவை உன்னுடைய பொருள்கள். உன் இச்சைப்படி பணி செய்யும் ஆள் நான். உன் ஆணைப்படி பணி செய்வதே என் உரிமையும் என் மகிழ்ச்சியும்.''

இப்படி அடிக்கடி நினைவூட்டிக் கொண்டு, உண்மையான பக்தியுடனும் வாழ்க்கை நடத்தினோமானால் 'நான்' என்னும் திரை ஒழிந்து பெருங் காட்சி அடைவோம்.

*   *   *

'நான்' என்பது இரண்டு விதமானதாகும். ஒன்று பக்குவப் பட்டுப் பழுத்து பக்தியோடு கலந்த 'நான்' என்கிற உணர்ச்சி. மற்றொன்று பழுக்காத ஆணவம். என் வீடு, என் குழந்தை, என் மனைவி, என் உடல், என் சொத்து, என் புகழ் - இவை போன்ற எண்ணங்கள் கூடியது 'பழுக்காத' அகங்காரம். இது கடவுளை மறைக்கிற திரை.

''ஆண்டவன் ஆணைப்படி பணி செய்பவன் நான். இவை அனைத்தும் அவன் சொத்து, அவன் உரிமை, அவன் சிறப்பு. நான் அவனுடைய பணியாள்; என் மகிழ்ச்சி அவனுடைய பணியைச் செய்வது'' என்று பக்தன் தன் வாழ்க்கையை நடத்துவான். அத்தகைய வாழ்க்கையின் பயனாக ஆணவமானது கனிந்த பழம் போலாகி விடும். நாளடைவில் அது உதிர்ந்து போகும். பக்தன் ஜீவன் முக்த நிலையை அடைவான்.

*   *   *

'நான்' என்னும் எண்ணத்தை எளிதில் அகற்றி விட முடியாது. அறிவும் அத்துவைத சாஸ்திரப் படிப்பும் இருந்தால் மட்டும் போதாது. தான் ஈசனுடைய சேவகன் என்று முழுதும் மாற்றிக் கொண்டு பக்தி வாழ்க்கை வாழ வேண்டும். பக்தனுடைய 'நான்'-தன்மையில் குற்றமில்லை. குழந்தையுடைய 'நான்' எவ்வளவு குற்றமற்றதோ அதைப் போன்றது. பழுக்காத அகங்காரத்தைத்தான் ஒழிக்கவேண்டும். பக்தனுடைய 'நான்' உணர்ச்சியானது கடவுளண்டை கொண்டு போய்ச் சேர்க்கும். பக்தி நெறியில் நின்றவனுடைய உள்ளத்திலும் ஓரளவு 'நான்' என்பது தங்கினாலும் அது ஆண்டவனுடைய அடிமையாக நிற்கிறது. அதனால் குற்றமில்லை. பக்தி மார்க்கம் மிகச் சிறந்த வழி.

*   *   *

உள்ளிப்பூண்டு வைத்திருந்த பாத்திரத்தை எவ்வளவு கழுவினாலும் நாற்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்




## 5. பக்தி மார்க்கம்

பகவான் ராமகிருஷ்ணர் ஒரு சீடருக்குச் சொல்லுகிறர் :

உனக்கு முன்னல் நான் இருக்கிறேன் அல்லவா? ஆனல் என் முகத்துக்கு முன்னல் ஒரு துணியைப் பிடித்துக் கொண்டேனுனல் என்னை நீ காண்பதில்லை. உடனே நான் மறைந்து போகிறேன். முன்னைப் போலவே நான் உனக்கு அருகிலேயே இருந்து வருகிறேன். ஆயினும் துணிக்குப் பின் நான் மறைந்து உன் கண்ணுக்கு இல்லாமற் போகிறேன். இவ்வாறே ஈசுவரன் உனக்கும் எனக்கும் அனைவருக்கும் வெகு அண்மையிலே இருக்கிறன்; மற்ற எப்பொருளையும் விடக் கிட்டத்திலே எப்போதும் இருக்கிறன்.

ஆனல் 'நான்' என்னும் ஒரு திரை அவனை மறைத்து விடுகிறது. உன் கண்ணுக்கு முன்னல் ஒரு சிறு துணியை வைத்துக் கொண்டால் பெரிய மலையும் மறைந்து போகிறது. அகங்காரம் ஆணவம் என்று சொல்லப்படும் இந்தத் திரையை நாம் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில் நாம் கடவுளைக் காணமுடியாது. 'நான்' என்பது ஒழிந்தால் பனிச் சென்று ஆண்டவன் தோன்றுவான்.

அருள் ஒருவன் பேரில் வீசினுல் அவன் தன் செயல் அனைத்தும் ஈசன் செயல் என்றும், நடைபெறும் நிகழ்ச்சிகள் எல்லாம் அந்தப் பெருங் கூத்தனின் கூத்து என்றும் உணர்வான். இந்த ஞானம் ஒருவன் பெற்று விட்டால் அவன் ஜீவன் முக்தனுகி விடுகிறன். அதாவது உடலுடன் இருக்கும் போதே முக்தி அடைந்து விடுகிறன். அவனுக்குப் பயம் என்பது கிடையாது; துயரம் என்பதும் இல்லை.

நன்ருக ஈடுபட்ட பக்தன் அடிக்கடி தனக்குத் தானே நினைவூட்டிக் கொள்ளுவான்: "ஐயனே, நீதான் எல்லாச்



# Stanes

## சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி

**பிரசித்திபெற்ற ஸ்டேன்ஸ் கம்பெனியார்**
**தயாரிக்கும் ஓர் விலை குறைந்த ரகம்**

**1, 2, 3, 7, 14, 20 ராத்தல்**
**டின்களில் கிடைக்கும்**




தற்செய்தி! ஸ்டேன்ஸ் கம்பெனியாரின் மனோகரமான சிவப்பு லேபின் கலப்பற்ற காப்பி இப்பொழுது ஏராளமாக கிடைக்கிறது.
தாங்களே பொடி செய்ய விரும்புபவர்களுக்கு, மிகவும் ஜாக்கிரதையாக பொறுக்கி, வறுத்த ஸ்டேன்ஸ் காப்பிக் கொட்டைகளும் கிடைக்கின்றன.

**தருவிக்கும் செலவின்றி இவைகளை பிரத்தியேகமாக பெறுங்கள்**

சிறந்த ரக காப்பிக் கொட்டைகள், பீபெரி, தட்டை எக்ஸ்ட்ரா போல்டுகள் 10, 80 ராத்தல் பைகளில், விலை விகிதங்களுக்கும் விவரங்களுக்கும் தி. யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட், கோயம்புத்தூருக்கு எழுதுங்கள்.

தென் இந்தியாவின் சிறப்பு

THE PICK OF THE SOUTH

பெங்களூருக்கு ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். எம். ஸ்ரீநிவாசாசாருலு & கோ.,
28, நரசிம்மராஜா ரோடு.

கர்நாடகாவிற்கு ஏஜண்டு:
மிஸ்டர் கர்ணம் ஹனுமந்தராவ்
மெர்ச்சண்ட்

துக்குள் ஸ்ரீ சா. கணேசன் விரும்பியது போல் கச்சிதமாக முடித்துக் கொண்டார்.

இன்னும் திரு ம. ப. பெரியசாமித் தூரன் திரு பொ. குருசாமி, திரு சு. திருவேங்கடாச்சாரி, திரு மு. மு. இஸ்மாயில், திரு ராம. சிதம்பரம், திரு ராமசடகோபன் முதலியவர்கள் பட்டி மண்டபத்தில் கலந்து கொண்டு சொற்பொழி வாற்றினார்கள்.

அன்றைய பிற்பகல் நிகழ்ச்சிகள் திரு நயினார் முகம்மது அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. ஸ்ரீமதி ஆ. ரா. இந்திராணியம்மையார், திரு எம். என். ரங்காச்சாரி, திரு மு. மு. இஸ்மாயில், திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் முதலியவர்கள் அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தியிருப்பார்கள். அவ்விதமே மறுநாளும் (3-4-50) நாட்டரசன் கோட்டை கம்பர் கோவிலில் ராவ்பகதூர் டி. எம். சின்னையா பிள்ளை அவர்கள் தலைமையில் 'கம்பராமாயணப் பதிப்புத் தொடக்கம் சிறப்பாக நடந்திருக்கும். தலைமைப் பதிப்பாசிரியர் திரு ச. வையாபுரிப் பிள்ளை நீண்டதொரு பிரசங்கம் நிகழ்த்தியிருப்பார் என்று எண்ணுகிறேன். ஏனெனில் நான் இருந்தபோதே, அவர் தலைமை உரை, கனிசமான புஸ்தகமாகத் தயாராகிக் கொண்டிருந்தது! மற்றும் பலர் அற்புதப் பிரசங்கங்கள் பொழிந்திருப்பார்கள். அவற்றை எல்லாம் கேட்க முடியாதபடி சீக்கிரமே காரைக்குடியை விட்டுப் புறப்பட வேண்டியதாக இருந்தது!

கம்பர் விழாவில் நடந்த கலை நிகழ்ச்சிகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லவேண்டும். முதல் நாள் இரவு ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் பல கம்பர் பாடல்களைக் கீர்த்தன முறையில் அமைத்துப் பாடிப் பல்லாயிரக் கணக்கான மக்களை மகிழ்வித்தார்.

மறுநாள் தேவகோட்டை தமிழிசைப் பள்ளிச் சிறுமிகள்,—சாரா, பார்வதி, ராதா, பிச்சம்மா, ராஜலட்சுமி முதலியவர்கள்—கம்பராமாயணத்திலிருந்து பல கட்டங்களுக்கு நடன-நாடகம் செய்து காட்டினார்கள். மிகவும் ரம்மியமாக இருந்தது.

இந்த அற்புதமான திருவிழாவுக்கு மூல காரண புருஷர் திரு சா. கணேசன். அவர் பசி நோக்காமலும், கண் துஞ்சாமலும், இரவும் பகலும் பல நாட்கள் ஓயாமல் உழைத்திருக்கிறார். அவருடைய உழைப்பும் கம்பன் பக்தியும் வார்த்தைகளால் சொல்லக் கூடியவையல்ல. உள்ளத்தால் உணரக் கூடியது. அப்படி உணர்ந்தார்கள் அன்று கூடியிருந்த பத்தாயிர மக்களும் என்பதை அவர்களே காட்டி விட்டார்கள். 'கம்பன் புகழ் வாழ்க' என்று ஸ்ரீ சா. கணேசன் கூறியதும் 'வாழ்க, வாழ்க' என்று அத்தனை பேர் வாயும் மொழிந்தன. அத்துடன், "கணேசன் வாழ்க!" என்றும் அவர்களில் பலருடைய வாய்கள் முணுமுணுத்தன.

ஸ்ரீ கணேசன் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து தொண்டு செய்த அன்பர்கள் சிலர்: திருவாளர்கள் மெ. கா. சித. சிதம்பரம் செட்டியார், தேவகோட்டை டி. ஆர். அருணாசலம், பள்ளத்தூர் சுப. அருணாசலம், மெ. செ. ச. மெ. மு. முத்துராமன், அபிஸீனியா நாச்சியப்பன் முதலியவர். போட்டோ உதவியவர்: திரு ரா. ம. மீனாட்சி சுந்தரம். இவர்கள் ஊக்கத்துடன் ஓடியாடி வேலை செய்ததைப் பார்த்தவர்கள் பாராட்டாதிருக்கமுடியாது.

இவ்வளவு சிறப்பான விழாவில் என்றென்றும் பசுமையாக ஞாபகம் வைத்துக் கொள்ளக்கூடிய அம்சங்கள் எத்தனையோ இருந்தன. என்றாலும், பத்து வருஷங்கள் கழித்து என்னை யாராவது "1950 வருஷத்துக் காரைக்குடி கம்பர் விழாவில் என்ன விசேஷமான அம்சம்?" என்று கேட்டால், முதல்நாள் நிகழ்ச்சிகள் முடிந்து, கடைசியில் ராஜாஜி கருத்துரை கூறும் போது செட்டிமார்களுக்கு என்று சொன்ன சில வார்த்தைகளைத்தான் குறிப்பிடுவேன். "செட்டிமார் நாட்டில் முன்பிருந்தது போன்ற செல்வநிலை இப்போது இல்லை. மிகவும் கஷ்டத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் இந்தக் கஷ்டங்கள் எல்லாம் சொற்பகாலம் இருக்கக்கூடியவை. இந்தக் கஷ்டங்கள் எல்லாம் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய இன்பத்துக்கு அறிகுறி. அதனால் அதைரியப் படாதீர்கள்; கவலைப் படாதீர்கள்!" என்று ராஜாஜி கூறினார்.

இதே கருத்தைத் தாங்கிக் கொண்டு ஒரு அட்டை அந்த கொட்டகைக் கால் ஒன்றில் தொங்கிக் கொண்டிருந்தது. ராமன் சுமந்திரனுக்கு விடை கொடுத்து அனுப்பும் போது, "துன்புளதெனின் அன்றோ சுகம் உளது!" என்று ஆறுதல் கூறுகிறான். அந்த வார்த்தைகளைத் தாங்கிக் கொண்டிருந்த அட்டை என் கண்ணில் பட்டது! அதே வார்த்தைகளையே ராஜாஜி அன்று கூற என் செவிகள் கேட்டன.

ராமனுக்கும் ராஜாஜிக்கும் எவ்வளவு ஒற்றுமை! டி. கே. சி. சொல்வதில்தான் எவ்வளவு உண்மையிருக்கிறது! அதைவிட என் நண்பர் இந்த வருஷக் கம்பர் விழாவுக்கு ராமர் தலைமை வகிப்பதாகக் கூறியது எவ்வளவு சரியாக இருந்தது!



காரைக்குடி கம்பர் விழாவுக்கு ராஜாஜி விஜயம் செய்திருந்தபோது, அமராவதிபுதூர் 'மகளிர் இல்ல'த்தில் தங்கியிருந்தார்கள். அப்பொழுது ராஜாஜி மகளிர் இல்லத்தின் தோட்டத்தில் அரசங் கன்று நடும் காட்சி.

தெய்வமாகக் கருதுவதா என்று புரியாத ஒரு குழப்பம் கம்பர் மனதிலிருந்தது என்பதை ஸ்தாபிக்கப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டார் ஆசிரியர் ஞானசம்பந்தனார்.

தலைவர் முடிவுரையுடன் அன்றையக் கூட்டம் இனிது முடிந்தது.

மறு நாள் காலை (ஏப்ரல் 2-ந் தேதி) 'கம்பன் கண்ட சர்வோதயம்' என்ற பொதுத்தலைப்பில் பத்து அன்பர்கள் கார்த்தியடிகள் கூறியிருந்த பத்து விஷயங்கள் பற்றிப் பேச ஏற்பாடாகியிருந்தது. இந்தப் பட்டி மண்டபத்துக்குத் திருவாளர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் தலைமை தாங்கி நடத்தினார்.

ஒன்பதரை மணிக்கு ஆரம்பிக்க வேண்டிய இந்நிகழ்ச்சி பல காரணங்களால் பத்தரை மணிக்கு ஆரம்பமாயிற்று. எவ்வளவு நேரங் கழித்து ஆரம்பித்தாலும் குறிப்பிட்ட நேரத்துக்குள் முடித்துவிட வேண்டும் என்பது செயலாளர் ஸ்ரீ சா. கணேசனின் கட்டளை! பத்துப் பேர் பேசியாக வேண்டும்; குறிப்பிட்ட நேரத்துக்குள் முடிக்க வேண்டும்! இது சாத்தியமாகக் கூடிய காரியமா? எனினும் தலைவர் "இப்போதே நேரமாகி விட்டது. சீக்கிரம் முடிக்க வேண்டும். பசி வந்திடில் பத்தும் பறந்து போம்!" என்றார். உடனே சபையில் 'கொல்' என்ற சிரிப்பு ஒலி எழுந்தது. சபையோர், தலைவரைச் சுற்றியமர்ந்திருந்த பத்துப் பிரசங்கிகளும் பசி வந்திடில் பறந்துபோய் விடுவார்கள் என்று எச்சரிக்கை செய்ததாகக் கொண்டு அவ்விதம் சிரித்தார்கள்.

'திருடாமை' என்னும் பொருள் பற்றிப் பேசிய திரு சொ. முருகப்பா கம்பர் ஓரிடத்திலாகிலும் திருடாமை என்ற வார்த்தையை உபயோகப் படுத்தாமையைக் குறித்து அங்கலாய்த்தார். ஆனால் சீதையைத் திருடியமைக்கு ராவணன் பட்ட பாட்டைக் கம்பர் யுத்த காண்டம் முழுதும் கூறியிருக்கிறார் அல்லவா! கார்த்தியடிகள் கூறிய திருடாமை என்னும் விஷயத்தை, அந்த வார்த்தையை உபயோகியாமல் பொருளை வலியுறுத்துகிறார் கவியரசர் கம்பர் என்று வலியுறுத்திக் கூறினார்.

அவருக்கு அடுத்தாற்போல் பேசிய ஸ்ரீமதி ராஜேஸ்வரி , நடராஜன் தமது நேரத்தில் திரு முருகப்பர் அவர்கள் சில நிமிஷங்கள் திருடி விட்டதாகச் சற்றும் நாவடக்கமின்றி ஆரம்பத்திலேயே குற்றம் சாட்டினார். ஆனால் அவர் பேச வந்த விஷயமோ நாவடக்கம்!

'உழைப்பை'ப் பற்றிப் பேசவந்த ஸ்ரீ மு. அருணாசலம் கம்பர் தேக உழைப்புக்கு முக்கியத்துவம் அளித்திருப்பதைச் சிறந்த உதாரணங்களால் விளக்கினார். வீடு கட்டும் தொழிலில் கம்பர் எவ்வளவு ஈடுபட்டிருந்தார் என்பதை லக்ஷ்மணன் ராமனுக்குப் பர்ணசாலை அமைத்துக் கொடுத்த கட்டத்தில் அவர் பாடியுள்ள சில பாடல்கள் நன்றாகக் காட்டுகின்றன என்றார்.

கடைசியில் 'புலனடக்கம்' என்பதைப் பற்றிப் பேச வந்த பேராசிரியர் ஸ்ரீ அ. சீனிவாசராகவன், 'புலனடங்குவதற்குள் பொழுது அடங்கிவிடுகிறது' என்று இரு பொருள்படத் தமது பிரசங்கத்தை ஆரம்பித்துத் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள பொழு

ஒண்மை அறிவில்லா
ஒன்னார்க்குப் பகைவன்!''

என்றெல்லாம் அடுக்கி விட்டுக் கடையில்,

''பகைவன் பகைவன்எனப்
பல்லோரும் சொன்னாலும்

பகைவனுக்கும் அருளுமொரு
பண்புடையோம் ஆனதினால்

கம்பன் திருநாளில்
கவிஞனவன் வாழ்கஎனப்

பம்பும் உணர்ச்சியுடன்
பல்லாண்டு கூறிடுவோம்!''

என்று வாழ்த்தி முடித்தார். மொத்தத்தில் கம்பர் கவி அரங்கம் மிகவும் வெற்றிகரமாக முடிந்தது. ராஜாஜியும், ரஸிகமணியும் மிகவும் ரஸித்து மகிழ்ந்தார்கள்.

அன்று பிற்பகல் மகா மகோபாத்தியாய முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் விழா ஆரம்பமாயிற்று. பண்டிதமணி அவர்கள் நிகழ்த்திய தலைமையுரை, வடமொழி இலக்கியங்களிலும், தென்மொழி இலக்கியங்களிலும், அவர்களுக்குள்ள அரிய பாண்டித்யத்தையும் ஆராய்ச்சித் திறனையும் புலப்படுத்துவதாக இருந்தது. ''பண்டிதமணி'' என்ற பட்டம், தகுதியுடையவருக்கே தன்னை அளித்திருப்பது குறித்து மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. அன்றைய தலைமையுரையில் பண்டிதமணி அவர்கள் மகாபாரதத்தில் வரும் சகுந்தலைக் கதையில் ஒரு ரஸமான சம்பவத்தைப் பற்றிக் கூறினார்கள்.

சகுந்தலையும் பரதனும் இருக்கிற இடத்துக்குத் துஷ்யந்த மகாராஜன் வருகிறான். சகுந்தலை அவனை அடையாளம் கண்டு கொள்ளுகிறாள். ஆனால் குழந்தை 'பரதனுடனிருந்த துஷ்யந்தமகாராஜனுக்கு, பரதன் யாருடைய குழந்தை என்று புரியவில்லை. அதைத் தெரிவிக்க வேண்டிய தர்மசங்கடமான நிலை சகுந்தலைக்கு நேருகிறது. இதிலிருந்து சகுந்தலை விடுபடுவதற்குக் குழந்தை பரதனைப் பார்த்து, ''வத்ஸ! (அருமை மகனே!) உன் தந்தைக்கு நமஸ்காரம் செய்!'' என்கிறாள். உடனே துஷ்யந்தனுக்குப் பரதன் தன்னுடைய மகன் என்பது புரிந்திருக்கும் அல்லவா!

இப்படிப் பல உதாரணங்கள் கூறித் தலைமையுரை நிகழ்த்தினார்கள் பண்டிதமணி அவர்கள். பண்டிதமணியின் பிரசங்கம் முழுதும் கேட்டுவிட்டுத்தான் அன்று ராஜாஜியும், ரஸிகமணியும், 'கல்கி' ஆசிரியரும் சென்னைக்கு ரயில் ஏறினார்கள்.

திருவாளர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் 'கம்பன் பெற்ற பெண்கள்' என்ற விஷயம்பற்றிச் சரஸத் தமிழில், அயோமுகி முதல் சீதை வரையிலுள்ள பெண் பாத்திரங்களின் குண விசேஷங்களைக் கம்பென் எப்படிச் சித்தரித்திருக்கிறான் என்று கூறினார். ஆமாம்; அவர் கம்பன் என்று கூற வேண்டிய இடங்களில் எல்லாம், பகரத்துக்கு முன்னால் ஒரு (ெ)கொக்கியை மாட்டிக் 'கம்பென், கம்பென்' என்றே கூறி வந்தார். அது அச் சபையில் கூடியிருந்த பலபேர் முகத்திலும் 'இவர் கூறும் கம்பென் யாரோ?' என்ற கேள்விக் குறியைப் போட்டு வைத்தது.

அன்று திருவாளர்கள் பழ. அழகப்பனும் கதி. சுந்தரமும் அவர்கள் பெயரிலுள்ள பொருளுக் கேற்பப் பேசினார்கள். கடைசியில் பேசிய தமிழாசிரியர் ஞானசம்பந்தனார் கம்பரைச் சற்றுப் பதம் பார்த்தார். ஆனால் கம்பர் தமது வாழ்நாளிலிருந்து இன்றுவரை எத்தனையோ ஞானசம்பந்தர்களைப் பார்த்திருந்ததனால் அவர் பாட்டுக்குத் தமது கற்றுச் சொல்லிக்கு ஏதோ பாடல்கள் சொல்லிக் கொண்டுதான் இருந்தார்! மேடையிலிருந்த கம்பர் படம் சபையோருக்கு அதைத் தெரிவித்துக் கொண்டிருந்தது. சாமனிய மனிதனைக் கருதுவதா,



காரைக்குடி கம்பர் விழாவில் பதினாயிரம் ஜனங்களுக்கு முன்னால் அஞ்சா நெஞ்சத்துடன் கம்ப ராமாயணப் பிரசங்கம் செய்த 'சிங்கக் குட்டி' வீரபாண்டியன்.




காரைக்குடி கம்பர் விழாக் கோட்டாரப் பந்தலின் அழகிய முகப்பையும், கோட்டைக்குள் அமர்ந்திருந்த ரஸிகர் மகாசபையின் சில பகுதிகளையும், கம்பர் பாடல்களைக் கொண்டே இன்னிசைக் கச்சேரி செய்த ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளையும், கம்பர் கழகக் காரியதரிசி ஸ்ரீ சா. கணேசன் தலைவர்களுக்கு விருந்து பரிமாறும் காட்சியையும், தலைவர் ராஜாஜி அவர்களின் ஒரு தோற்றத்தையும் இங்கே காணலாம்.

# கம்பர் விழாக் காட்சிகள்



தொடங்கி "அழகு நம் உள்ளத்திலேதான் இருக்கிறது. எதையும் அநுபவிப்பதற்கு நல்ல மனது வேண்டும். நல்ல மனதுடன் படித்தால் கம்ப ராமாயணம் அற்புதமாயிருக்கும்" என்று அழகாய் முடித்தார்.

இவ்விதம் முதல் நாள் விழா பிரமாதமான கோலாகலத்துடன் நடந்து முடிந்தது.

அடுத்த நாள் காலை பத்தரை மணிக்குக் கவியரங்கம் ஆரம்பமாயிற்று; கவியரங்கத்துக்கு திரு எ. வி. பால் நாடார் அவர்கள் தலைமை வகித்தார்கள்.

இந்த வருஷம் கவியரங்கில் கலந்து கொண்ட பாவலர்கள் கம்பரைத் தோழனாகவும், அரசனாகவும், தெய்வமாகவும் இன்னும் பலவிதமாகவும் உறவு கொண்டாடிப் பாடினார்கள். ஏன், கம்பரைப் பகைவனாகவும் கொண்டு பாடினார் ஒருவர். இத்தனை உறவுகளுக்கும் இடம் கொடுக்கும் கம்பரின் பெருமையை என்னவென்றுரைப்பது?

கம்பரைத் தோழமை பூண்டு பாடிய திரு சாபி அவர்கள்,

காலையிலே மாலையிலே—இறக்கைகள்
கட்டிப் பறந்திடுவோம்
சோலை புகுந்திடுவோம்-சொர்க்கத்தில்
சொக்கிக் கிடந்திடுவோம்

என்று கம்பர் தோழமையின் மூலமாகத் தாம் பெற்ற இன்பத்தை வர்ணித்தார்.

தோழர் சாபிக்கு இன்னும் எப்படியெல்லாம் கம்பர் உதவினார் பாருங்கள்:

எட்டாத சீர்களுக்குத்—தானி நான்
ஏணிகள் வைக்கையிலே
இட்ட(து) எடுப்பவன்போல்—
எதுகைகள்
எடுத்துத் தந்திடுவான்.
உத்திகள் சொல்லிடுவான்
-வாழ்வி நன்
உண்மை வகுத்திடுவான்
புத்தி புகட்டிடுவான்—அருளுக்கும்
பாத்திர மாக்கிடுவான்.

சாபிக்குப் பிறகு சிற்றம்பலக் கவிராயர் கம்பரைக் காதலனாகக் கொண்டு கவிதைச் சுவையுடன் பாடினார். அதில் ஒரு அழகான பகுதியைக் கேளுங்கள்:—

சொல்லும் இலக்கணத்தின்
சொத்தடிமை ஆகாமல்,

சொல்லுக்குச் சொல்லழகு
சுகமாய்ச் சுதிகூட்ட

கல்லும் கனிந்துருகக்
கவிசொன்ன மாராசன்

சந்தத்தின் இங்கிதமும்
செந்தமிழின் மெய்யழகும்

சிந்தனையின் லட்சியத்தின்
சிகரத்துப் பொன்னொளியும்

தந்தெனக்கு என்னுளத்தைத்
தன்னடிமை யாக்கிவிட்ட

பொன்னடியான் அந்தப்
புலவர் திருக் கோமான்

பாவியலின் பண்பையெலாம்
பண்ணமைப்பில் தான்படைத்த

காவியத்தின் ஜீவியத்தில்
காட்டிவிட்ட கம்பனவன்

ஆவி குளிரவந்த
அமுதக் கவிக்குமரன்

கோவில் கண்டான்—என்மனமே
குடிகொண்டான்!

பிறகு திண்டுக்கல் முருகேசக் கவிராயர், கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன், கலைமகள் உதவி ஆசிரியர் மோ. ஸ்ரீ செல்லம் முதலியவர்கள் கவி அரங்கில் கலந்து கொண்டு பாடினார்கள். ஒவ்வொருவர் பாடலும் ஒவ்வொரு விதத்தில் சிறப்பாக இருந்தது. 'கம்பன் என் தெய்வம்' என்று பாடிய பேராசிரியர் திரு முத்துசிவன்,

"செம்பொருள் விளக்கம்தந்து,
திருவருள் நெறியைக்காட்டி,

இன்பநற் காதைமூலம்
யாவரும் வியக்குமாறு,

அம்புவி தனிலேசுவர்க்க
ஆட்சியை அமைத்துவிட்ட

கம்பன்என் தெய்வம் ஐயா!
கம்பன்என் தெய்வம் ஐயா!"

என்று முடித்தது சபையோர் "ஆஹா உண்மை!" "முற்றிலும் உண்மை!" என்று ஆமோதிக்கும்படி யிருந்தது.

கம்பரைப் பகைவனாகக் கொண்ட திரு பாஸ்கரத் தொண்டைமான், கம்பர் யார் யாருக்குப் பகைவர் என்பதைப் பிரமாத உற்சாகத்துடன் எடுத்துக் கூறினார்.

"அறிவின்மைக்குப் பகைவன்
அன்பின்மைக்குப் பகைவன்,

வறியவர்க்கு வழங்குமொரு
வண்மையிலார்க்குப் பகைவன்,

அமுதினையே மாந்த
அறியாதார்க்குப் பகைவன்

வெண்மைக்குப் பகைவன்
வெறியருக்குப் பகைவன்

# காரைக்குடி கம்பர் விழா

**[ எஸ். வி. எஸ். ]**

( சென்ற வாரத் தொடர்ச்சி )

பிறகு தூத்துக்குடிப் பிரமுகரும் கம்பனுடைய பரம பக்தருமான திரு ஏ. வி. பால் சாடார் அவர்கள் பேசினார்கள்.

கிஷ்கிந்தா காண்டத்தில் ஒரு பாடல் வருகிறது. அதாவது, ராமனும் லக்ஷ்மணனும் சீதையைப் பிரிந்து கானகத்தில் நடந்து செல்கிறார்கள். அவர்களுடைய வருகையைத் தூரத்தில் மறைவிலிருந்து அனுமன் பார்க்கிறான். "ஆகா, அதோ வருகிறார்களே இரண்டு மனிதர்கள்! அவர்கள் யாரோ தெரியவில்லை. ஆனால் இந்த வெய்யில் வேளையில் காய்ந்து எரியும் கற்கள் எல்லாம் இவர்கள் பாதம் பட்டவுடன் செந்தேன் கமழும் புஷ்பங்களாக மாறி விடுகின்றனவே! இது என்ன ஆச்சரியம்! இவர்கள்தான் தர்ம தேவதைகளோ?" என்று வியப்படைகிறான்.

காய்எரி கனலும்கற் கள்
 கன்னுடை மலர்களே போல்

ஆயசெங் கமலபா தம்
 தோய்தொறும் குழைந்துதோன் றும்

போயின திசைகள்தோ றும்
 மரனொடு புல்லும்எல் லாம்

சாய்வுறும் தாழ்வபோல் இங்(கு)
 இவர்களோ தருமமா வார்!

இதைப்பற்றி ஒரு நண்பர் "இப்படியும் ஒரு கற்பனையா? இது ஓரியண்டல் ஹைபர்போலி (மிகை நாட்டு உயர்வு நவிற்சி) அல்லவா?" என்று கேட்டாராம். "இல்லை; இம்மாதிரி மனோபாவனை மிகவும் இயற்கையானது!" என்று ஸ்ரீ பால் சாடார் அவர்கள் கூறி, அதற்கு உதாரணமாக ஹென்ரி ஹைனே என்ற ஜெர்மன் கவிஞர் தமது ஏழாவது வயதில் நெப்போலியனைப் பார்த்தபோது உண்டான உணர்ச்சியைப் பதினேழாவது ஆண்டில் கவியாகப் பொழிந்ததை எடுத்துக் காட்டினாராம். நெப்போலியன் குதிரையின்மீது சென்ற போது, சாலையின் இரு கரைகளிலுமிருந்த மரங்கள் அவனுக்கு வணங்கி வணக்கம் செலுத்தியது போல் தோன்றியது என்பதாக மேற்படி ஜெர்மன் கவிஞர் வர்ணித்திருப்பதைக் கூறி, கவிதையின் இலட்சணம் இப்படியெல்லாம் உள்ளத்தின் உணர்ச்சிகளை வெளியிட்டுக் கூறுவதுதான் என்று அந்த நண்பருக்கு அறிவுறுத்தினாராம்.

இந்த விஷயத்துக்கு வருவதற்கு, திரு பால்சாடார் அவர்கள் வெகு நேரம் நெப்போலியன் சரித்திரத்திலும், ஹென்ரி ஹைனே வாழ்க்கை வரலாற்றிலும், யூதர்கள் அந்தக் காலத்தில் பட்ட கஷ்டங்களிலும் செலவழித்து விட்டார்! திரு பால்சாடார் அவர்கள், ஹைனேயின் கவிதைத் தொகுதி கிடைக்குமோ என்று காரைக்குடி கல்லூரியில் விசாரித்தாராம்; அந்தப் புஸ்தகம் இங்கு இல்லை என்று பதில் வந்ததாக மிகவும் வருத்தத்துடன் சபையில் தெரிவித்துக் கொண்டார். ஆனால் அப்படிப் புத்தகம் கிடைக்கவில்லையென்பதை அங்கே கூடியிருந்தவர்கள் பெருமகிழ்ச்சியுடன் வரவேற்றனர்!

பெரிய விஷயங்களைக் கேட்டு ஓரளவு களைத்திருந்த சபையோர்களைக் "கல்கி" ஆசிரியர் அரைமணி நேரம் குலுங்கச் சிரிக்கவைத்து உற்சாகப்படுத்தினர். இராமனை எப்படிப்பட்ட தியாக மூர்த்தியாகக் கம்பர் வர்ணித்திருக்கிறார் என்பதைச் சில பாடல்களின் மூலம் எடுத்துக் காட்டினார். கம்பர் ராமாயணம் பாடிய பிறகு தமிழ் நாட்டில் எப்படி ஸ்ரீ ராமபிரான் சாதி பேதங்களின்றிச் சகல வகுப்பாருடைய இதயங்களையும் கவர்ந்து வீட்டுக்கு வீடு வியாபித்து அண்ணனாகவும் தம்பியாகவும் அப்பனாகவும் பிள்ளையாகவும் பெயர் கொண்டு விளங்குகிறார் என்பதை எடுத்துக் காட்டினார்.

பேராசிரியர் மூத்து சிவன் 'அழகு' என்னும் விஷயத்தைப் பற்றிப் பேசத்

டியாரிடம் சென்றதாகக் கதை. ஆனால் நமது தந்தி இலாகாக்காரர்கள் ஸ்ரீ மாணிக்கவாசகரையும் மிஞ்சி விட்டார்கள்! ஒரு போலீஸ் ஜமேதார் கிழக்கு கோதாவரியிலுள்ள ஒரு ஊரிலிருந்து பத்ராசலத்திலுள்ள ஒரு அதிகாரிக்கு "நான் முப்பது ஜவான்களுடன் வருகிறேன். 10-மணிக்கு (hour) லாரிகளைத் தயாராய் வைத்திருக்கவும்" என்று தந்தி கொடுத்தாராம். "நான் முப்பது ஜவான்களுடன் வருகிறேன். 1000 குதிரைகளுக்கு லாரிகளைத் தயாராய் வைத்திருக்கவும்" என்று பத்ராசலத்தில் தந்தி கிடைத்ததாம். பத்து மணி, பத்து குதிரைகளாகக் கூட மாறவில்லை; ஆயிரம் குதிரைகளாக மாறி விட்டது! நமது தந்தி இலாகாக்காரர்கள் மாணிக்க வாசகரையும் தோற்கடித்து விட்டார்கள் அல்லவா?

★

"ஸ்ரீ பிரகாசம் காரு மறுபடியும் தம்முடைய பழைய ஆசனத்தில் போய் உட்கார வேண்டும் என்று மேலிடத்திலிருந்து கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்."

—ஒரு செய்தி

"நானும் அதற்காகத்தானே போராடிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய அந்தப் பழைய பிரதம மந்திரி ஆசனத்தை ஸ்ரீ குமாரசாமி ராஜா அல்லவா பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறார்?" என்று பிரகாசம் காரு பதில் கூறலாம்.

★

காங்கிரஸ் அக்ராசனராக இருந்த ஆசாரிய ஜே. பி. கிருபளானி இப்பொழுதெல்லாம் நமது சர்க்காரைத் தாக்குவதில் முனைந்திருக்கிறார். அவர் இப்பொழுது எழுதியிருக்கும் கட்டுரை ஒன்றில், "நமது சர்க்காரில் பண்டித நேரு, சர்தார் படேல் இந்த இரண்டு பேரும் தான் கொள்கைகளைத் தீர்மானம் செய்பவர்கள். மற்றவர்கள் எல்லோரும் தலையாட்டிபொம்மைகள். அவர்கள் சொல்லுவதற்கெல்லாம் 'ஆமாம்' போடுகிறார்கள்" என்கிறார். "சரி பண்டித நேரு, சர்தார் படேல் சொல்கிறபடி எல்லோரும் கேட்டுக்கொண்டு ஒற்றுமையாக வேலை செய்கிறார்கள் போலிருக்கிறது" என்று நாம் நினைக்கிறோம். உடனே கிருபளானி, "மந்திரி சபையில் ஒற்றுமையே இல்லை" என்கிறார். சற்றுமுன், நேரு சொல்கிறபடி எல்லோரும் தலையை ஆட்டுவதாகச் சொன்னாரே, ஏன் இப்படி நேர்மாறாகச் சொன்னார் என்று நினைக்கிறோம். மந்திரி சபையில் ஒற்றுமை இல்லாவிட்டால் வேற்றுமை இருக்கிறதா? அவ்வாறு வேற்றுமை இருப்பதைக் கிருபளானி விரும்புகிறாரா என்ற சந்தேகத்துடன் மேலே படிக்கிறோம். "மந்திரி சபையில் வேற்றுமையில் ஒற்றுமை நிலவ வேண்டும். அதுதான் ஜனநாயகத்துக்கு உகந்தது" என்கிறார்.

இப்பொழுது ஸ்ரீ நியோகியும் டாக்டர் சியாம் பிரசாத் முகர்ஜியும் மந்திரி சபையிலிருந்து ராஜிநாமா செய்து விட்டார்கள். மந்திரி சபையில் மேற்சொன்ன இரு மந்திரிகளும் சர்க்காருடன் அபிப்பிராய வேற்றுமை கொண்டு ஒற்றுமையுடன் வெளியில் வந்திருப்பதிலிருந்தே, வேற்றுமையில் ஒற்றுமை இருப்பதும் தெரிகிறதல்லவா? கிருபளானி ஸார்; உங்கள் கவலை விட்டதா?

★

"யுனிவர்ஸிடி பட்டதாரிகள் அத்தனை பேரும் வாழ்க்கைக்குத் தகுதியற்றவர்கள்" என்று ஸர் ஸி. வி. ராமன் பேசியிருக்கிறார்.

அப்படி ஒரே அடியாய்த் தள்ளிவிட வேண்டாம், ஸார்! அந்தப் பட்டதாரிகளில் சிலர் "வாழ்க்கை"ப் படத்தைப் பார்த்திருக்கிறார்கள்!

★

"டப்ரி ஸ்டேஷன் அருகில் 38-ம் நம்பர் பாஸஞ்சர் ரயிலுடன் 3-ம் நம்பர் ரயில் வண்டி மோதிக் கொண்டு விட்டது. எத்தனை பேர் மரணமடைந்தார்கள் என்று தெரியவில்லை. 3-ம் நம்பர் ரயில் டிரைவர் காயமடைந்தார். வைத்திய வசதிகளுடன் நிவாரண ரயிலை அனுப்பவும்" என்று ஒரு உயர்தர ரயில் அதிகாரி ஸஹரான்பூர் ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தந்தி அடித்தாராம். இதை அறிந்த ஸஹரான்பூர் வாசிகள் அலறியடித்துக் கொண்டு ஸ்டேஷனுக்கு வந்தார்களாம். அந்த டிரைவரின் மனைவி மூர்ச்சை போட்டு விழுந்து விட்டாளாம். ஸ்டேஷன் மாஸ்டரும் பறந்து விழுந்து கொண்டு எல்லா ஏற்பாடுகளும் செய்து முடித்தபோது நிஜமாக விபத்து ஒன்றுமே நடக்கவில்லை என்றும், ஆபத்து நேர்ந்தால் நிலைமையைச் சமாளிக்கத் தயாராயிருக்கிறார்களா என்று சோதிக்கவே அந்தத் தந்தியை அனுப்பியதாகவும் கூறினாராம் உயர்தர அதிகாரி. 'புலி வருகிறது!' என்ற கதையாகிவிடப் போகிறது. நிஜமாகவே ஆபத்து ஏற்பட்டுத் தந்தி வந்தால் யாரும் அதை அலட்சியம் செய்யாமல் இருக்க வேண்டுமே!

★

"தப்பிச் சென்ற லைக் அலியின் துணிகளைச் சலவை செய்துவந்த தொழிலாளர்கள் இருவர் பிடிபட்டனர்." —ஒரு செய்தி

மேற்படி சலவைத் தொழிலாளிகள் லைக் அலி தான் ஊரை விட்டுப் போய் விட்டாரே என்று அவர் சலவைக்குப் போட்டிருந்த உடைகளைப் பகிரங்கமாக அணிந்து கொண்டு நடமாடியிருக்க வேண்டும்!

மூடத்தனமாகக் காரியம் செய்யக்கூடாது. இளந்தென்றல் வீசி இனிமை தரவேண்டும். ஆமாம்; சென்னையில் என் தோழர் ராஜாஜிக்கு ஏதோ கண்களில் வலி என்று கேள்விப்பட்டேனே, அது எப்படி இருக்கிறது?

**வாயுதேவன்:**—இதற்குள் குணமாகியிருக்கும். ராஜாஜி தற்சமயம் தமிழ் இலக்கிய சேவை செய்துவருகிறார். கம்பர் விழாக்களில் தலைமை வகிக்கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதங்களில் ஈடுபட்டுத் தமிழ்ப் பணி ஆற்றிவருகிறார்.

**மகாத்மாஜி:**—அப்படியா? அதோ தூரத்தில் காவி உடையில் செல்கிறாரே, அவர் தான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர். அவரிடம் இந்தச் சேதியைத் தெரிவித்தால் ஒருவேளை மகிழ்ச்சி அடையலாம்; அல்லது மௌனத்திலும் ஆழ்ந்து விடலாம். சரி, டெல்லியில் என்ன விசேஷம்? என் ஆத்மார்த்த சீடர் நேருஜியும், என் அத்யந்த நண்பர் லியாகத் அலியும் கூடிப் பேசினார்களாமே, அதன் முடிவு என்ன ஆயிற்று!

**வாயுதேவன்:**—நேருவும் லியாகத்தும் கூடிப் பேசி இந்தியாவின் இரு பகுதியிலும் மைனாரிடிகளின் பாதுகாப்புக்கு வேண்டிய திட்டங்களை வகுத்து கையொப்பம் இட்டிருக்கிறார்கள். மைனாரிடிகள் இப்போது சற்று தைரியம் அடைந்திருக்கிறார்கள்.

**மகாத்மாஜி:**—ஆகா, நேருவின் பெயரைக் கேட்கும்போதே புளகாங்கிதம் தோன்றுகிறது. அவரை ஒரு தடவை ஆலிங்கனம் செய்து கொள்ளவேண்டும் போலிருக்கிறது. ஆனால் என்ன செய்வேன்? விதேகியாகி விட்டேன். பூலோகத்தைப் பிரியும்படியும் நேர்ந்து விட்டது. அடாடா! நான் மட்டும் இப்போது பூலோகத்தில் இருந்தால் எங்கே இருப்பேன், தெரியுமா!

**வாயுதேவன்:**—ஏன்? டில்லியில் நேருஜியின் அருகில் இருந்து ஆனந்தமடைவீர்கள்.

**மகாத்மாஜி:**—அதுதான் இல்லை; வங்காளத்துக்குப் புறப்பட்டிருப்பேன். கிழக்கு வங்காளத்திலும் மேற்கு வங்காளத்திலும் ஊர் ஊராகச் சுற்றுப் பிரயாணம் செய்து அஹிம்சா தர்மத்தையும் அன்பு மதத்தையும் பரப்பிக்கொண்டிருப்பேன். போகட்டும்; எப்படியோ வங்காளத்து நிலைமை சீர்பட்டால் அதுவே எனக்குப் பெருமை தரும். சரி; லியாகத் அலிகான் கராச்சிக்குப் புறப்பட்டுப் போய்விட்டாரா? ரொம்ப நல்ல மனிதர். என் ஆசியை அவருக்குச் சொல்லு!

**வாயுதேவன்:**—சொல்கிறேன், பாபு! அவரும் தங்களை அடியோடு மறக்கவில்லை. டில்லிக்கு வந்ததும் அன்று சாயந்திரமே ராஜகட்டத்துக்குப் போய்த் தங்கள் சமாதிக்கு மரியாதை செய்து விட்டு வந்தார்.

**மகாத்மாஜி:**—எனக்கு மரியாதை செய்யாவிட்டால் மோசமில்லை. உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் காற்றிலே விட்டு விடப் போகிறார்! ஜாக்கிரதை!

**வாயுதேவன்:**—அந்தப் பழி எனக்கு வேண்டாம். இந்தத் தடவை அவர் அப்படி விட்டாலும் அதை நான் எடுத்துச் செல்லப் போவதில்லை. அவர் அருகிலேயே போகாமல் இருந்து விடுகிறேன். ஜவாஹர்லால்ஜிக்கு ஏதாவது சேதி உண்டா?

**மகாத்மாஜி:**—அவருக்கு நான் சொல்ல என்ன இருக்கிறது? என் அன்பையும் ஆசியையும் சொல்; அதோடு 'காற்று நுழையாத இடத்திலும் அன்பு நுழைந்து அதிசயங்களை விளைவிக்கும்' என்று சொல்லு!

**வாயுதேவன்:**—அப்படியே, பிரபு!

[வாயுதேவன் விர்ரென்று கீழ் நோக்கி மறைகிறான். சொர்க்கத் திரை விழுகிறது.]

# அக்கப் போர்

மே மாதம் முதல் தேதியிலிருந்து ஞாயிற்றுக்கிழமை தபாலாபீஸ் கிடையாது. அன்று அவசரமாகக் கடிதம் அனுப்ப விரும்புகிறவர்கள் கவரின் மீது மேற்கொண்டு ஒரு அணா ஸ்டாம்பு ஒட்டிக் குறிப்பிட்ட தபால் பெட்டிகளில் போடவேண்டும். ஆனால், ஞாயிற்றுக்கிழமை தபாலை எடுத்து ஞாயிற்றுக் கிழமையே அதைப் பட்டுவாடா செய்ய விரும்புகிறவர்கள், கவரின்மீது 'எக்ஸ்பிரஸ் டெலிவரி' என்ற சிவப்பு லேபிளுடன் இரண்டணா ஸ்டாம்பும் ஒட்டவேண்டுமாம். அந்தக் கடிதங்களைத் தந்தி ஆபீஸ் மூலமாகப் பட்டுவாடா செய்யப் போகிறார்களாம். தந்தி இலாகா என்றதும் உண்மையில் பயமாய்த்தான் இருக்கிறது. ஞாயிற்றுக்கிழமையன்று தபாலில் சேர்க்கும் கடிதங்களை அதற்கு அடுத்த ஞாயிற்றுக்கிழமையாவது பட்டுவாடா செய்து விடுவார்களா?

★

நமது தந்தி இலாகாவின் சாமர்த்தியத்தை நினைக்கும்போது மாணிக்கவாசகர் ஞாபகம் வருகிறது. பாண்டிய ராஜா குதிரை வாங்குவதற்காகக் கொடுத்த பணத்தைக் கொண்டு அவர் ஆவுடையார் கோயிலில் சிவனுக்குக் கோவில் கட்டிவிட்டார். பிறகு சிவபெருமானின் தயவினால் நரிகளையெல்லாம் குதிரைகளாக மாற்றிக்கொண்டு பாண்

தில் இந்தியாவின் பிரதம மந்திரிக்குப் பக்கபலமாக இருக்க வேண்டும்.

இந்தியா பாகிஸ்தானின் எதிர்கால வாழ்வு அந்த ஒப்பந்தம் அமுலுக்கு வருவதையே பொறுத்திருக்கிறது என்பதைப் பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனுப் லியாகத் அலிகானும் ஒப்புக் கொண்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

"இந்த ஒப்பந்தத்தைப் பூரணமாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்பதே என்னுடைய உறுதியான தீர்மானம். எனவே இவ்விஷயத்தில் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள தலைவர்களும் பத்திரிகைகளும் ஒத்துழைக்க வேண்டும்.

"தவறான ஒரு வார்த்தையோ அல்லது நடவடிக்கையோ எத்தனை தலைமுறைகள் சென்றாலும் பரிகாரம் செய்ய முடியாத விபரீதத்தில் கொண்டு வந்து விட்டுவிடும்.

"இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் புதிய நல்லுறவு ஏற்படுவதற்கு இந்த ஒப்பந்தம் முதல் படியாகும்."

இவ்வாறாக, ஜனுப் லியாகத் அலிகான் இந்தியா — பாகிஸ்தான் க்ஷேமத்துக்கு மேற்படி ஒப்பந்தம் எவ்வளவு முக்கியமானது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

ஒப்பந்த ஷரத்துக்களை நிறைவேற்றும் விஷயமாக இரண்டு பிரதம மந்திரிகளும் அடிக்கடி சந்தித்துப் பேசத் தீர்மானித்திருப்பது எல்லோருக்கும் எதிர்காலத்தில் மிகுந்த நம்பிக்கையைக் கொடுப்பதாக இருக்கிறது.

காந்தி மகான் காட்டிய வழியை இம்மியும் வழுவாது அனுஷ்டிப்பவரும் இந்தியாவின் முடிசூடா மன்னருமான பண்டித ஜவாஹர்லால் நேரு கையெழுத்திட்டுள்ள ஒப்பந்தத்துக்குத் தேச மக்கள் எல்லோரும் ஏகோபித்து ஆதரவு அளிக்க வேண்டும். அதை அமுலுக்குக் கொண்டு வருவதில் எல்லோரும் இந்திய சர்க்காருடன் ஏகமனதாக ஒத்துழைக்க வேண்டும்.

இந்த மகத்தான முயற்சியில் வெற்றி பெறுவோமாயின் பின்னர் பாரத நாடு ஆசியாவுக்கு மாத்திரம் அல்ல, அகில உலகத்துக்கும் தலைமை வகிக்கக் கூடிய மகத்துவத்துடன் விளங்கும்.

# ★ ★ ★ தேவலோகத்திலே! ★ ★ ★

**இடம்:**—தெய்வலோகம்
**நேரம்:**—பிரார்த்தனை வேளை.

மகாத்மாஜி கண்களை மூடி தியானத்தில் ஈடுபட்டிருக்கிறார். அவரைச் சுற்றி அவரது சீடர்களும் சகாக்களும் உட்கார்ந்து ராம பஜனை செய்து கொண்டிருக்கிறார்கள். பிரார்த்தனைக்குப் பிறகு மகாத்மாஜி முக மலர்ச்சியுடன் காணப்படுகிறார். அவருடைய அந்தரங்கக் காரியதரிசி மகாதேவ தேசாய் அருகில் அமர்ந்திருக்கிறார். பிரார்த்தனை முடிந்ததும் மகாதேவ தேசாய் காந்தி மகாத்மாவிடம் ஏதோ காதோடு சொல்லுகிறார். மகாத்மாஜி புன் முறுவலுடன், "அப்படியா, வாயுதேவனா? வரச்சொல். அவருடன் பேசவேண்டும்" என்கிறார்.

வாயுதேவன் காந்திஜியின் சமீபம் வந்து கைகூப்பி வணங்கி நமஸ்கரிக்கிறார்.

**மகாத்மாஜி:**—வாயுதேவனா? வாவேணும்; சௌக்கியமா? எங்கிருந்து வருகிறீர்? பாகிஸ்தானிலிருந்தா?

**வாயுதேவன்:**—தற்சமயம் நான் ஹிந்துஸ்தானத்திலிருந்து வருகிறேன். பாகிஸ்தானில் ஏதாவது தங்களுக்குத் தேவையுண்டோ?

**மகாத்மாஜி:**— தேவை ஒன்றுமில்லை! அங்கே கராச்சியில் என்னுடைய சிலை ஒன்று இருந்ததல்லவா? அதை நீ கீழே தள்ளிவிட்டதாக எனக்கு ஒரு செய்தி கிடைத்தது. அது உண்மைதானா?

**வாயுதேவன்:**—சத்திய தேவனே! சத்தியமாகச் சொல்லுகிறேன். அந்தச் செய்தியை நம்பவே நம்பாதீர்கள். வெறும் அபாண்டம்! நான் என் தங்களைக் கவிழ்க்கப் போகிறேன்? சுத்தப் பொய்! நான் தங்களுடைய பரம பக்தன் என்பது தெரியாதா? யாரோ பாதகர்கள் செய்து விட்டு என் பேரில்......

**மகாத்மாஜி:**—அது போகட்டும்; யார் செய்திருந்தாலும் எனக்குக் கவலையில்லை. என்னைச் சுட்டாலும் என் சிலையை வீழ்த்தினாலும் எல்லாம் எனக்கு ஒன்றுதான். எதையும் நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வேன். ஆனால் சில மாதங்களுக்கு முன்பு நீர் ஆந்திர தேசத்தில் புகுந்து அட்டூழியங்களைச் செய்தீரே! அவற்றைத்தான் என்னால் பொறுக்க முடியவில்லை! இப்படியெல்லாம் நீர் செய்தால்......

**வாயுதேவன் :**—பிரபு மன்னிக்க வேண்டும்! என்பேரில் தவறு இல்லை. தென்னாட்டில் மழை இல்லையென்று புகார் செய்தார்கள். அதற்காக வருணனைத் தள்ளிக் கொண்டு வந்தேன். அந்த வேகத்தில் அப்படித் தெரியாமல் செய்து விட்டேன்.

**மகாத்மாஜி :**—போனது போகட்டும். இனிமேல் நீர் அப்படியெல்லாம் கண்

2. வகுப்புக் கலகங்களால் அல்லல் பட்ட கிழக்கு வங்காளம், மேற்கு வங்காளம், அஸ்ஸாம், திரிபுரா, பீகார் முதலிய பிரதேசங்களைச் சேர்ந்தவர்கள் தங்கள் இஷ்டப்படி இடம் பெயர்ந்து செல்லவும் திரும்பி வரவும் அனுமதிக்கப் படுவார்கள். அவர்கள் நகை நட்டுகள் உள்பட தங்களுடைய சொத்துக்களை எடுத்துச் செல்லலாம். அவர்களுக்கும் அவர்களுடைய சகல சொத்துக்களுக்கும் பாதுகாப்பு அளிப்பதாக இரு சர்க்கார்களும் உறுதி கூறுகிறார்கள்.

3. இடம் பெயர்ந்து சென்றவர்கள் திரும்பிவர விரும்ப வில்லையென்றால், அவர்கள் தாங்கள் வசித்த இடங்களிலுள்ள சொத்துக்களைத் தங்கள் இஷ்டப்படி விற்கவோ, மாற்றிக் கொள்ளவோ செய்யலாம். அத்தகைய சொத்துக்களைப் பாதுகாக்க சிறுபான்மையோர் சமூகப் பிரதிநிதிகள் அடங்கிய கமிட்டி நியமிக்கப்படும்.

4. சோரம் செய்யப்பட்ட பெண்களையும் சொத்துக்களையும் மீட்க சகல முயற்சியும் எடுத்துக் கொள்வார்கள். பலாத்காரமான மத மாற்றங்களை அங்கீகரிக்க மாட்டார்கள்.

5. வகுப்புக் கலகங்களுக்குக் காரணங்களை ஆராய்ந்து இனி அத்தகைய கலகங்கள் நடவாமல் தடுப்பதற்காக ஒரு ஹைகோர்ட் நீதிபதியின் தலைமையில் சிறுபான்மையோரின் நம்பிக்கையைப் பெற்றப் பிரமுகர்கள் அடங்கிய கமிஷனை நியமிப்பார்கள்.

6. பத்திரிகைகள், வானொலி, தனி நபர், ஸ்தாபனம் இவைகளால் வகுப்புத்துவேஷத்தையோ, யுத்தத்தையோ தூண்டும் துஷ்பிரசாரம் நடைபெறாமல் தடுப்பதற்குற்ற எல்லா முறைகளையும் கைக்கொள்வார்கள்.

7. அகதிகளின் மனதில் நம்பிக்கை ஏற்பட்டு அவர்கள் தாங்கள் வசித்த விடத்துக்குத் திரும்பி வருவதற்காக அந்தப் பிரதேசங்களில் இந்திய சர்க்காரைச் சேர்ந்த ஒரு மந்திரியும் பாகிஸ்தான் சர்க்காரைச் சேர்ந்த ஒரு மந்திரியும் நியமிக்கப்படுவார்கள். இவர்களைத் தவிர கிழக்கு வங்காளம், மேற்கு வங்காளம், அஸ்ஸாம் மாகாணங்களில் சிறுபான்மையோரையும் மந்திரிகளாக நியமிப்பார்கள்.

இவைதான் இந்தியா பாகிஸ்தான் ஒப்பந்தத்தின் முக்கிய ஷரத்துகள்.

• • •

இதற்கு முன் பாகிஸ்தானுடன் ஏற்பட்ட சில்லறை ஒப்பந்தங்களுக்கும் இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்துக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு.

இந்தியா பிரதம மந்திரியும் பாகிஸ்தான் பிரதம மந்திரியும் அலசி ஆராய்ந்து இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருக்கிறார்கள்.

"வங்காள நிலைமை முற்றி நாம் பயங்கரமான கட்டத்தை அடைந்தோம். செங்குத்தான மலையுச்சியின் ஓரத்திலிருந்து தலை குப்புற விழும் தறுவாயில் இருந்தோம். நல்லவேளையாக விழுந்து விடாமல் அந்தப் பயங்கரமான இடத்திலிருந்து திரும்பினோம். இதுவே நாம் அடைந்துள்ள நிச்சயமான வெற்றி" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியிருப்பதிலிருந்து, மேற்படி ஒப்பந்தத்தினால் எத்தகைய பேராபத்து தவிர்க்கப்பட்டது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

"பாகிஸ்தான் மதத்தை அடிப்படையாகக் கொண்டதால் எல்லா மதத்தினருக்கும் சமத்துவ உரிமைகள் கிடைப்பதென்பது முடியாத காரியம் என்று ஜனங்களின் மனதில் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் மேற்படி சந்தேகத்துக்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்றும், பாகிஸ்தான் ஜனநாயக முறையையே அடிப்படையாகக் கொண்டது என்றும், மதபேதம் எதுவுமின்றி எல்லாருக்கும் ஜீவாதார உரிமைகள் அளிப்பதே பாகிஸ்தானின் நோக்கம் என்று பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபை தீர்மானித்திருக்கிறது என்றும் பாகிஸ்தான் பிரதம மந்திரி உறுதி கூறியிருக்கிறார்.

"எனவே நம்மை எதிர்நோக்கி நிற்கும் பிரச்னைகளைக் கண்டு நாம் ஆத்திரப்படாமல் நிதான புத்தியுடனும் நல்லெண்ணத்துடனும் உறுதியுடனும் அவைகளுக்குப் பரிகாரம் தேடவேண்டும். ஆகையால் இரண்டரை வருஷ காலமாக நம்மைச் சூழ்ந்திருந்த பயங்கரமான நிலைமைக்கு முற்றுப் புள்ளி வைப்போம் என்ற உறுதியுடன் நாம் இந்த ஒப்பந்தத்தை அமுலுக்குக் கொண்டு வர முற்பட வேண்டும்" என்று ஜவாஹர்லால்ஜி கூறியிருப்பதை முப்பது கோடி மக்களும் ஆதரித்து அவ்வாறே அதை அமுலுக்குக் கொண்டு வரும் விஷயத்

# விரோதி முடிந்தது! விரோதம் ஒழிந்தது!

விரோதி வருஷம் முடிந்து விக்ருதி வருஷம் பிறந்திருக்கிறது.

இந்தப் புது வருஷம் பிரகாசத்துடன் ஆரம்பமாகி யிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

ஏனெனில், விரோதி வருஷம் முடிவுற்ற இந்தச் சமயத்திலே இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இருந்து வந்த விரோதபாவம் ஒழிந்து, பரஸ்பர நட்பையும் நல்லெண்ணத்தையும் அடிப்படையாகக் கொண்ட புதிய ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது அல்லவா?

1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி பாரதநாடு சுதந்திரம் பெற்றபோது மகாஜனங்கள் எவ்வளவு மகிழ்ச்சியடைந்தார்களோ, அது போலவே 1950-ம் வருஷம் ஏப்ரல் மாதம் எட்டாம் தேதி இந்தியா—பாகிஸ்தான் ஒப்பந்தம் ஏற்பட்டதைக் கண்டு இந்திய மகாஜனங்கள் மகிழ்ச்சியடைந்திருக்கிறார்கள்.

ஏனென்றால் அன்று பெற்ற சுதந்திரம் நிலைத்து இந்திய மக்கள் இன்ப வாழ்வு எய்துவது இன்று ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தின் வெற்றியையே பொறுத்திருக்கிறது.

"நம்முடைய எதிர்காலம், பாகிஸ்தானிலும் இந்தியாவிலும் இந்த ஒப்பந்தத்தை எவ்வளவு தூரம் நிறைவேற்றுகிறார்கள் என்பதையே பொறுத்திருக்கிறது" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு பார்லிமெண்டில் கூறியிருப்பதன் கருத்து அதுதான்.

பரம விரோதிகளாக இருந்த பிரிட்டிஷாரிடமிருந்து சுமுகமாகச் சுதந்திரம் பெறுவதற்கு மகான் காந்தி காட்டிய வழி உறுதுணையாக இருந்தது. தீராத பகை என்று தோன்றிய விபரீத நிலையைத் தகர்த்துப் பாகிஸ்தானுடன் சுமுகமாக ஒப்பந்தம் ஏற்படுவதற்கும் இன்று காந்திஜியின் வழியே உறுதுணையாக அமைந்திருக்கிறது.

இந்தியாவின் வாழ்வையே நிர்ணயிக்கும் இத்தகைய மகத்தான பிரச்னைகளைத் தீர்க்கவல்ல சஞ்சீவி பாரத நாட்டு மக்களிடம் இருக்கும்போது, மற்ற முறைகளைப் பற்றிச் சிந்திப்பதும் விவாதிப்பதும் மடமையாகும்.

இந்தியா-பாகிஸ்தான் பிரச்னைகளைத் தீர்க்க யுத்தம்தான் உற்ற முறை என்று கூறியவர்கள், இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தைக் கண்டாவது தங்களுடைய தவறை உணர்ந்து கொள்ள வேண்டும். அவசரப்பட்டுப் போரில் இறங்குவது ஒரு பிரச்னையைத் தீர்க்கப் போய் ஒன்பது புதிய பிரச்னைகளைச் சிருஷ்டித்துக் கொண்டதாக முடியும் என்பதை அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

காந்திஜி காட்டிய அற வழியைப் பண்டித ஜவாஹர்லால் நேரு உறுதியுடன் பின்பற்றி யிராவிடில் பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனாப் லியாகத் அலிகான் வீண் கௌரவம் பாராட்டாமலும் பழைய சம்பவங்களை மறந்தும் புதுடில்லிக்கு வரும்படியான சூழ்நிலை ஏற்பட்டிராது. அவர் புதுடில்லிக்கு வந்திராவிடில் எவ்வித சமரச ஒப்பந்தமும் ஏற்பட்டிருக்க முடியாது.

எனவே ஜனாப் லியாகத் அலிகான் புதுடில்லிக்கு வந்தது பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு முதல் வெற்றி; பாகிஸ்தானுடன் ஒப்பந்தம் ஏற்பட்டது இரண்டாவது வெற்றியாகும்.

• • •

இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தம், சொத்து சுதந்திரங்களையும் உற்றார் உறவினரையும் பறிகொடுத்துவிட்டு வந்த லட்சக் கணக்கான அகதிகளின் அந்தகார வாழ்க்கை மீண்டும் பிரகாசம் அடையலாம் என்ற நம்பிக்கையைக் கொடுத்திருக்கிறது.

1. மதவேற்றுமை யின்றி எல்லோருக்கும் சமத்துவமாகப் பிரஜா உரிமைகள் அளிக்கப்படும் என்று இந்தியா, பாகிஸ்தான் சர்க்கார்கள் உறுதி கூறுகிறார்கள். பெரும்பான்மையோர் அல்லது சிறுபான்மையோர் சமூகம் என்ற வேற்றுமை யின்றி அரசியல், கலாசார வாழ்க்கை, வழிபாடு, சொத்து, பேச்சு சுதந்திரம், தொழில் சுதந்திரம் முதலியவை விஷயத்தில் எல்லோருக்கும் சமத்துவ உரிமையும் பாதுகாப்பும் அளிக்கப்படும்.



★ சினிமா உலகில் புகழ்பெற்று விளங்கும் ஒலிப் பதிவாளரான ஸ்ரீ தின்ஷா தம் இளம் குமாரிகளுக்கு 'நவ் ஜோத்' என்னும் பூநூல் கல்யாணம் போன்ற பார்ஸி சமயச் சடங்கைச் சிறப்பாகச் செய்தார். காஸினோ தியேட்டரில் நடந்த மேற்படி சடங்கு வைபவமே ஒரு சினிமாக் காட்சிபோல் புதுமாதிரியாக விளங்கியது. மேலே படத்தில் பார்ஸி மத குருவும் ஸ்ரீ தின்ஷாவின் குமாரிகளும் நிற்பதைக் காணலாம். ★ ★ ★

செய்தல், ஹரிஜன முன்னேற்றம், முதியோர் கல்வி முதலிய பல்வேறு விஷயங்களிலும் சிரத்தையெடுத்துக் கொண்டு ஒரு 'உதாரணக் கிராம'மாகச் செய்ய முயற்சித்து வருகிறார்கள். அந்த முயற்சியில் அவர்கள் பெரிதும் வெற்றியடைந்திருக்கிறார்கள் என்பதைக் கனியாம்பூண்டி கிராம க்ஷேமாபி விருத்தி சங்கத்தின் வருஷ அறிக்கையின் மூலம் அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறோம்.

## சங்கீத பொன் விழா

கர்நாடக சங்கீதக் கலை நல்ல முறையில் வளருவதற்கு நமது சங்கீத சபைகள் பேருதவி செய்து வந்திருக்கின்றன. நம்முடைய மகா வித்வான்கள் பலர் சங்கீத சபைகளின் மூலமாகவே பிரசித்தி பெற்றார்கள். சங்கீத சபைகளிலே பாடும்போது வித்வான்களும் அவர்களுடைய வித்வத்தும் சோபிப்பதுபோல் வேறெங்கும் சோபிப்பதில்லை. இவ்விதம் சங்கீதத்தை வளர்த்துவந்த சபைகளுக்குள்ளே திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சபை மிகப் பழமையானது. 1900-ம் ஆண்டில் ஸ்தாபிக்கப்பட்டு பற்பல ஏற்றத் தாழ்வுகளுடன் நடந்து வந்திருக்கும் இச்சபையின் ஐம்பதாவது ஆண்டு பொன் விழாவை இம்மாதத்தில் அச்சபையார் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இந்த விழாவை முன்னிட்டுப் பல சங்கீத, நாட்டியக் கச்சேரிகளையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். கச்சேரி நிகழ்ச்சி விவரங்களுடன் மற்றும் பல அரிய கட்டுரைகளையும் அபூர்வமான பழைய காலத்துச் சங்கீத வித்வான்களின் படங்களையும் தாங்கிய பொன் விழா மலர் ஒன்றும் அச்சபையார் வெளியிட்டிருக்கிறார்கள். ஸ்ரீ பார்த்த சாரதி சபைக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்தப் பழம் பெரும் சபையின் தலைவர் ஸ்ரீ டி. ஆர். சீனிவாசய்யங்கார் அவர்களையும் மற்றச் சபை நிர்வாகிகளையும் பாராட்டுகிறோம்.

கல்கி

மலர் 9 இதழ் 37

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# என்ன சேதி?

## கேட்பார் யார்?

"**எ**ங்களுக்குமேல் எஜமானர்கள் யாருமில்லை. ஆகையால் நாங்கள் துணிந்து எந்தக் குற்றம் வேண்டுமாயினும் செய்வோம். எங்களைக் கேட்பார் யாருமில்லை" என்று கல்வி இலாகாவைச் சேர்ந்த சிலர் மார் தட்டுகிறார்கள் என்று தோன்றுகிறது. எஸ். எஸ். எல். சி. பரீட்சைத் தாள்களை அபத்தக் களஞ்சியமாகத் தயாரித்து மாணவர் சமூகத்தின் ஹிருதயத்தைப் பிளந்த கிராதகர்களைப் பற்றி ஏற்கெனவே எழுதியாகிவிட்டது. இந்தமாதம் 4, 5 தேதிகளில் நடந்த ஈ. எஸ். எல். சி. பரீட்சையின் கேள்வித் தாள்கள் அவற்றைக் காட்டிலும் அபத்தக் களஞ்சியமாக விளங்கின. அந்தக் கேள்விகளின் அலங்கோலங்களைப் பற்றி ஆசிரியர்கள், பள்ளிக்கூட நிர்வாகிகள், மாணவர்கள் முதலிய பலர் நமக்கு எழுதியுள்ள கடிதங்களில் சிலவற்றை இந்த இதழின் வேறு பக்கங்களில் காணலாம்.

ஈ. எஸ். எல். சி. பரீட்சைக்கு எழுதிய குழந்தைகளில் பெரும்பாலோரும் பதினைந்து வயதுகூட நிரம்பாதவர்கள். நிரபராதிகளான இந்தக் குழந்தைகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்ட ஈவிரக்கமற்ற ராட்சதர்கள் தண்டனை எதுவும் இல்லாமல் தப்பித்துக் கொள்வது பெரும் அநீதியல்லவா?

நமது சட்ட மந்திரி கனம் மாதவ மேனன் கல்வி இலாகா நிர்வாகத்தை ஏற்றுக் கொண்ட பின் மேற்படி இலாகாவில் நல்ல சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்று சிரத்தையுடன் முயன்று வருகிறார். அவரது முயற்சிகளை யெல்லாம் பாழாக்குவதற்கு இன்னொரு பக்கத்தில் இத்தகைய கோர கிருத்யங்கள் நடந்து வருகின்றன. இத்தகைய கொடுமதியாளர்களைக் கல்வி இலாகாவிலிருந்து உடனே வெளியேற்றிவிட வேண்டும். அவ்வாறு செய்யும் சக்தி கனம் மாதவ மேனனுக்கு இல்லையென்றால், அவர் சட்ட இலாகா நிர்வாகத்தை மாத்திரம் தம்மிடம் வைத்துக் கொண்டு கல்வி இலாகாவை வேறு யாருடைய தலையிலாவது கட்டி விடுவது நலம். ஆயிரக் கணக்கான இளம் மாணவர்கள், குழந்தைகள், பெற்றோர்கள், பொது ஜனங்களின் சாபத்துக்குக் கனம் மாதவ மேனன் ஏன் உள்ளாக வேண்டும்?

## உதாரணக் கிராமம்

**க**ளியாம்பூண்டி காஞ்சீபுரம் தாலுகாவில் உள்ள ஒரு கிராமம். அதில் சுமார் இரண்டாயிரம் ஜனங்களுக்குமேல் வசிக்கிறார்கள். அந்தக் கிராமத்தில் பஞ்சாயத்து சபை இருப்பினும், வருமானக் குறைவினால் அந்தச் சபையின் அலுவல்கள் சரிவர நடைபெறவில்லை. எனவே, அந்தக் கிராம ஜனங்கள் கிராம க்ஷேமாபிவிருத்தி சங்கம் என்று ஒரு சங்கத்தை ஆரம்பித்தார்கள். களியாம்பூண்டி கிராமத்திலும் சுற்று வட்டத்திலுள்ள சிறிய கிராமங்களிலும் இருக்கும் வயது வந்த ஆடவர்கள் பெண்கள் யாவரும் அதில் அங்கத்தினராக இருக்கிறார்கள்.

சுமார் எழுபது ஆண்டுகளாகக் கேட்பாரற்றுக் கிடந்த கால்வாய்த் திட்ட வேலைகள் மேற்படி சங்கத்தின் பெருமுயற்சியால் மீண்டும் ஆரம்பமாகியிருக்கின்றன. பள்ளிக்கூடத்துக்காக இருபத்தையாயிரம் ரூபாய் செலவில் அழகான கட்டிடத்தை நிர்மாணம் செய்திருக்கிறார்கள். மேற்படி கிராமங்களிலுள்ள குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வி அளித்தல், சுகாதார அபிவிருத்தி, விவசாயிகளுக்கு உதவி, கால்நடை வைத்திய சாலை, சந்தை, கண் காட்சி முதலியன அமைத்துக் கால் நடைகளை விருத்தி

# முதல் வெற்றி!


“இன்று நமக்குள் ஏற்பட்ட நட்பு நீடூழி காலம் நிலைத்து நிற்க வேண்டும்!”
இங்கே கல்லணை கட்டப்படும்.
பாகிஸ்தான்
இந்தியா
இந்தியா- பாகிஸ்தான் ஒப்பந்தம்




# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 இதழ் 37 | ஏப்ரல் 16 | விக்ருதி ௵ சித்திரை 4




"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



## உஷ்ணமாயிருக்கும் வேளையில்



## ஓவல்டின் கலந்த குளிர்ந்த பானம்

### புத்துணர்ச்சியும் போஷாக்கும் தரும்.

அதிகரித்த உஷ்ணம் உங்கள் ஜீவசக்தியைக் குறைத்து, அமைதியின்மையும், அசௌகரியமும் உண்டாக்கும்

உஷ்ண வேளையில் 'ஓவல்டின்' கலந்த குளிர்பானம் பருகலாம். அது குளிர்ச்சியும் புத்துணர்ச்சியும் அளிக்கும். அதைவிட முக்கியமாக புதிய ஜீவசக்தியளிக்கும் சாதாரண போஜனத்துக்கு உதவி புரிவதான மதிப்பு வாய்ந்த அதிகப்படி உணவாகவும் விளங்குகிறது

ஓவல்டின் ஆரோக்கியத்திற்கு இவ்வளவு உதவிபுரிவது என்னவெனில் அதில் பழுத்த பார்லி மால்டு உள்ள புஷ்டியும் ஜீவசக்தியும் தரும் குணங்களும் சத்துக்களை எப்பொழுதும். விசேஷமாகத் தயாரித்த கோகோவும். இயற்கை பாஸ்பைடுகளும் விடமின்களும் நிறைந்த அளவு அடங்கியுள்ளன.
'ஓவல்டின்' என்று பெயர்கொண்டது ஒன்றுதான். அது இணையற்ற பிரத்யேக வகையைச் சேர்ந்தது.

# 'OVALTINE'

## ஓவல்டின்




உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்.

விநியோகஸ்தர்கள்:— கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி, (இந்தியா) லிட்.,

OV. 304.

## ஜம்மியின் "லிவர்க்யூர்"

எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களுக்கு விஜயம் செய்கிறார். ஈரல் குலைக்கட்டி சம்பந்தமான வியாதிகளுக்கு அவரிடம் நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| புதுக்கோட்டை: | 17-4-50 | மெஸர்ஸ். வசந்தா லாட்ஜ் |
| காரைக்குடி: | 18-4-50 | மெஸர்ஸ் ஏ. வி. & சன்ஸ் டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| சிவகங்கை: | 19-4-50 (காலை 9 முதல் 11 வரை) | மெஸர்ஸ். செளரி & கம்பெனி |
| தேவகோட்டை: | 20-4-50 (காலை 9 முதல் 11 வரை) | மெஸர்ஸ். மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| மதுரை: | 21 & 22-4-50 | மெஸர்ஸ். டி. என். வி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ் |
| பாலக்காடு: | 24-4-50 | மெஸர்ஸ். எஸ் நாதன் & கோ. |
| கோயமுத்தூர்: | 25 & 26-4-50 | மெஸர்ஸ். ஈஸ்வர் & கோ. |
| சேலம்: | 28 & 29-4-50 | மெஸர்ஸ். சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி, லிமிடெட் |

ஆலோசனை நேரம்: காலை 9 முதல் 11 வரை, மாலை 3 முதல் 5 வரை

## ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

திருச்சிராப்பள்ளி — மதராஸ்

---




## போனோமிண்ட்

### பேதி மிட்டாயிக்கு ஜே!

திவ்வியமான பப்பர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

ஏஜண்டுகள்: தி ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜன்ஸி
99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்—1

